# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



துறுதுறு நட்பு!

KALKI ● 06.12.2009 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்



சிநேகித எழுத்தாளர்கள்

சுபா வழங்கும்

நட்பு ஸ்பெஷல்

நாங்களும் 'திக்' ஃப்ரெண்ட்ஸ்!

வாசகர்களுக்குப் போட்டி உள்ளே...

# சுபா வழங்கும் நட்பு ஸ்பெஷல்!



## கல்கி அடுத்த இதழ்...

YACM மெட்டமைப்பில்...
ஏராளமான இசையுலக ஸ்டார்ஸ் மினுக்கும்
துள்ளலான

# மியூஸிக் ஸ்பெஷல்





நட்பு ஸ்பெஷல் இதழை அமைப்பது பற்றி ஆசிரியர் குழுவுடன் பேச கல்கிக்குச் சென்றிருந்தோம்.

கல்கி அலுவலகத்தில் நுழையும் போது, தாய் வீட்டில் இருப்பது போல் ஒரு சுவாதீனம். எத்தனை இனிய நினைவுகள் கிளர்ந்து எழுகின்றன!

நாங்கள் சுபாவாக இணைந்ததற்குக் காரணம் கல்கி. எங்கள் சமூகப் பார்வையை விரிவாக்கிக் கொடுத்தது கல்கி. திரை விமர்சனங்கள் எழுதச் சொல்லி, அந்தக் கனவுத் துறைக்குள் காலெடுத்து வைக்க வழி செய்தது, கல்கி.

கல்கி சிறுகதைப் போட்டியில் பரிசு பெற எத்தனை முயற்சிகள் மேற்கொண்டோம்? அதே சிறுகதைப் போட்டிக்கு நடுவராக பிற்பாடு செயல்படும் கௌரவம் எப்படிக் கிடைக்கப் பெற்றோம்?

# நட்பின் நுழைவாயில்

எழுத்தாளர்கள் வல்லவர்களாக இருந்தால் போதாது, நல்லவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதை கல்கி ஆசிரியர் திரு ராஜேந்திரனின் நிழலில் உணர்ந்தோம். அடுத்தவரை சமமாகப் பார்க்கும் பக்குவமும், மாறாத எளிமையும் எவ்வளவு உயர்வானவை என்பதை அவரைப் பார்த்துக் கற்றோம்!




அந்த எளிமை, அதிராத பேச்சு இப்போதைய ஆசிரியர் சீதா ரவியிடமும் இறங்கியிருப்பதை இந்தச் சந்திப்பில் மறுபடி கவனித்தோம்.

ஆசிரியர் குழு கூடியது. வட்ட மேஜை

திட்டமேஜையானது. ஆளுக்கொரு ஆலோசனை, நிமிடத்துக்கொரு பரிமாணம் என்று கருத்துக்கள் எட்டுத் திக்கும் எட்டிப் பார்த்தன.

கல்லூரி காம்பவுண்டு தாண்டியதும் கலைந்து போகும் நட்புகள் உண்டு. கடைசி மூச்சு வரை கை விலகாத நட்பும் உண்டு. சினிமா கதைகளில் மட்டுமே கண்ட நட்பும் உண்டு. சிதையாமல் சிறந்த நட்பும் உண்டு. அவற்றைக் கவனிக்கலாம்.

மேலினம், கீழினம், பாலினம் என்று பாகுபாடு பார்க்காத நட்பு பற்றி அலசலாம். வரலாற்றைப் புரட்டி நண்பர்களைத் தேடலாம். கற்பனை செய்பவரிடம் கதை கேட்கலாம். கருத்தானவரிடம் கவிதைகள் கேட்கலாம்.

## எழுத்தாளர்கள் வல்லவர்களாக இருந்தால் போதாது. நல்லவர்களாகவும் இருக்க வேண்டும்.

வரையத் தெரிந்தவரிடம் ஓவியம் கேட்கலாம். பேசத் தெரிந்தவரிடம் பேட்டி எடுக்கலாம். பார்வைக்கெட்டாத தொலைவுக்குப் போனவரைத் தேடிப் பிடிக்க வழி செய்யலாம்.

பேசியவை பலப்பல. செயல்படுத்த முடிந்தவை சில.

நட்புக்கு நாங்கள் அத்தாரிட்டி இல்லை. ஆனால், நட்பு பற்றிப் பேச எங்களுக்கு ரொம்பப் பிடிக்கும். எத்தனை கோணங்களில் அதன் ஆழம் பற்றி அடுத்தவர்களுக்குப் புலப்படச் செய்ய முடியும் என்று விவாதிப்பது சுகமாயிருந்தது. அந்தச் சுகம் உங்களுக்கும் கிடைத்தால், மகிழ்வோம்.

நட்புடன்,
சுபா




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

சி

சின்னப்பசங்களின் நட்பை செல்லுலாய்டில் அழகாகச் செதுக்கிய 'பசங்க' இயக்குநர் பாண்டிராஜ், தமது நண்பர்களைப் பற்றிய அனுபவங்களை இங்கே பகிர்ந்து கொள்கிறார்:

**வெள்ளைச்சாமி:** என் பால்ய கால நண்பன். வெள்ளைச் சாமியை எனக்கு மிகவும் பிடிக்கக் காரணம் என்னுடைய அண் ணனின் பெயரும் வெள்ளைச்சாமிதான். ஸ்கூல் படிக்கும்போது திருட்டுத்தனமாக சினிமா பார்க்க நிறைய உதவி செய்வான். நான் சேலத்துல மெடிக்கல் ஷாப்பில் வேலை செய்தப்ப சென் னையில் ஃபைனான்ஸ் கம்பெனியில் வேலை செஞ்சான் வெள் ளைச்சாமி. என் உணர்வுகளைச் சரியா புரிஞ்சுக்கிட்டு 'பாண்டி, நீ சினிமாவுக்கு வரணும்டா'ன்னு சொன்னதோடு மட்டுமில்லாமல், சென்னை போரூரில் அவன் ரூம்ல தங்கறதுக்கு இடமும் கொடுத் தான். 'பசங்க' படத்தின் க்ளைமாக்ஸை இவன் வாழ்க்கையில் நடந்த சம்பவத்தை வைச்சுத்தான் எடுத்திருப்பேன். நம்ம வெள் ளைச்சாமியோட காதலி ஆக்ஸிடெண்ட் ஆகி கோமா ஸ்டேஜ்ல ஹாஸ்பிட்டல்ல அட்மிட் ஆகியிருந்தா. எத்தனையோ முயற்சிகள் செய்த டாக்டர், 'இந்தப் பொண்ணுக்குப் பிடிச்ச யாராவது ஒருத்தர் குரலைக் கேட்டா கண்முழிச்சுப் பார்க்க வாய்ப் பிருக்கு'ன்னு சொல்லிட்டாரு. நம்ம வெள்ளைச் சாமியும் ஹாஸ்பிட்டலுக்குப் போய் அந்தப் பொண்ணு பக்கத்துல நின்னு அவ பெயரைச் சொல்லிக் கூப்பிட்டான். அந்தப் பொண்ணும் ஒரு வழியா கண்ணைத் திறந்து பாத்துச்சு.





* பாண்டிராஜ்

**கிருஷ்ணன்:** இவனும் நானும் ஊர்ல ஒரே ஸ்கூல்ல படிச்சிருந்தாலும், எனக்கு ரொம்ப க்ளோஸ் ஆனது சேலத்துல மெடிக்கல்ஸில் என்னோடு வேலை செய்தபோதுதான். எனக்கு டைரக்டர் ஆகணும்ங்கறது மாதிரி கிருஷ்ணனுக்கு நடிகனாகணும்ங்கறது கனவு. அதனால கொஞ்ச காலம் என்கூடத் தங்கியிருந்தான். நான் அசிஸ் டெண்ட் டைரக்டராக இருக்கும்போது டைரக்டர் ஏதாவது திட்டினா, ரொம்ப டென்ஷனா ரூமுக்கு வரு வேன். அந்தச் சமயத்துல கிருஷ்ணன் ஏதாவது கிறுக் குத்தனமா செய்தால் கன்னாபின்னான்னு திட்டிடுவேன். நம்ம கிருஷ்ணன் அதுக்குத் திருப்பி ரியாக்ட் பண்





# பாசக்காரப் 'பசங்க'!

ணாம அமைதியாவே இருப்பான். சாப்பாட்டு ராமன் மாதிரி இவன் சாப்பாட்டு கிருஷ்ணன். குடும்பச் சூழ்நிலை காரணமாக சிங்கப்பூர் போய்ட்டான். பசங்க படத்துக்கு சிங்கப்பூர் தமிழர்களின் வரவேற்பை அப் டு டேட் சொன்னவன் கிருஷ்ணன்.

**ஜெயச்சந்திரன்:** எனக்கு ஒருவிதத்தில் உறவுக்காரன்கூட. எங்க நட்பின் இறுக்கத்தைப் பார்த்து எங்களைப் பிரிக்க முயன்று பலர் தோற்றிருக்கிறார்கள். என்னைவிட சொத்தும், சொந்தமும் அதிகம் உண்டு இவனுக்கு. ஜெயச்சந்திரனைப் பார்த்து நான் பொறாமைப்பட்டதில்லை. ஆனால், இவனைப் பார்த்து இயங்கியிருக்கிறேன். பசங்க படத்தின் 'அன்பு' கேரக்டர் ஜெயச்சந்திரனின் மறுபதிப்பு. நாங்க ரெண்டு பேருமே கிட்டத்தட்ட ஒரே வயசு என்றாலும், நான் நாலாவது ஃபெயிலானதால் ஜெயச்சந்திரனை விட ஸ்கூல்ல ஒரு வருஷம் பின்னாடிதான் வருவேன். இதுகூட சௌகரியம்தான் எனக்கு. அவனோட ட்ரெஸ், புத்தகம் எல்லாம் எனக்கு வந்துடும். அப்பா, அம்மாவை இழந்த எனக்கு, இன்னைக்கும் திருமயம் பக்கத்துல இருக்கற என் ஊருக்குப் போனா சாப்பிட இருக்கிற ஒரே வீடு ஜெயச்சந்திரன் வீடுதான்.''

– ராகவ்குமார்

# ஹிந்தியில் பேச அஞ்சல் வழியில் பயிற்சி
# ஆங்கில மொழி அருமையாகப் பேச அஞ்சல் வழியில் பயிற்சி

ஒரு தாய் எலி தன் குஞ்சுகளுடன் சென்று கொண்டிருந்தது. எதிரே ஒரு பூனை பாய்ந்து வந்தது. குஞ்சுகள் அனைத்தும் தாயின் காலைக் கட்டிக் கொண்டன. தாய் எலி அவைகளை, 'நானிருக்கிறேன், கவலைப் படாதே' என்ற அர்த்தத்தில் தட்டிக் கொடுத்த வண்ணம், பூனையைப் பார்த்து, 'வௌ... வௌ' என்று குரைத்தது. பூனை பயந்து, அதிர்ந்து ஓடியது. எலிக்குஞ்சுகள் பெருமை யாக தாயைப் பார்த்தன. தாய் எலி குஞ்சு களைப் பார்த்து, 'மற்றொரு மொழி தெரிந்து வைத்திருப்பதால் உண்டாகும் பலனைப் பார்த்தீர்களா' என்று கேட்டு புன்னகை செய்தது.

ஆம், கம்ப்யூட்டரோ, கணக்கோ, விஞ் ஞானமோ அல்லது இவை அனைத்துமோ கற்றிருந்தாலும், மற்றவர்களுக்கு புரியும் மொழியில் எடுத்துக் கூறவோ, எழுதவோ தெரியாவிட்டால் இக்கல்வியறிவு எவ ருக்கும் பயன்படுவதில்லை. அதாவது நம் எண்ணங்களை மற்றவர்களுக்கு, அவர் களுக்கு புரியும் மொழியில் எடுத்துக் கூற வேண்டும்.

நம் நாட்டில் 90 சதவீதத்துக்கும் மேலானவர்கள் ஹிந்தி மொழியில் உரையாடுவதால் அம்மொழியில் பேசவும், பேசுவதை புரிந்து கொள்ளவும் தெரிந்து வைத்திருப்பது அவசியமாக உள்ளது. இன்றைய கால கட்டத்தில் ஹிந்தியுடன் நல்ல ஆங்கிலத்திலும் பேசத் தெரிந்தவர்களுக்கு வேலை வாய்ப்புகள் அதிகமாக உள்ளது.

இதனை மனத்தில் கொண்டு **பாரத ஸ்டேட் பாங்க் அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம்** (SBIOA Institute, Chennai) அஞ்சல் வழியில் பேச்சு மொழி ஆங்கில பயிற்சி மற்றும் அஞ்சல் வழியில் பேச்சு மொழி ஹிந்தி பயிற்சி ஆகியவற்றை அளித்து வருகின்றது. இப்பயிற்சியில் சேர்ந்து முறையாக பயிற்சி பெறுபவர்கள், ஆறே மாதங்களில் ஹிந்தியில் உரையாட முடியும், இலக்கண சுத்தமான ஆங்கிலத்தில் தடையின்றி பேச முடியும். இப்பயிற்சிகள் சென்னையில் 15 ஆண்டுகளாக நடத்தப் பட்டு வருகின்றன. இப்பயிற்சியில் சேர்ந்து முறையாக பயின்றவர்கள் அனைவரும் நல்ல மொழிவள ஆற்றலைப் பெற்று பயனடைந்துள்ளனர். இப்பயிற்சிகள் பற்றிய விபரங்கள் :

**பேச்சு மொழி இந்தி டிப்ளமா / பேச்சு மொழி ஆங்கில டிப்ளமா**

1. **பயிற்சியில் மொழி ஆர்வமுடைய எவரும் சேரலாம். (பள்ளிச் சிறுவர் முதல் சீனியர் ஆனவர் வரை)**
2. **பேச்சு மொழி ஹிந்தி பயிற்சி தமிழ் மூலமாகவும் ஆங்கிலம் மூலமாகவும் கற்பிக்கப்படுகின்றது.**
3. **பேச்சு மொழி ஆங்கிலம் தமிழ் மூலமாக வும், தமிழ் தெரியாத வடநாட்டினருக் காக ஹிந்தியிலும் நடத்தப்படுகின்றது.**
4. **அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எங்கிருந்தபடியும் சுலபமாகப் படிக்கலாம்.**
5. **இரு வழித் தொடர்பு** (Two way Communication) **இப்பயிற்சியின் சிறப்பு அம்சமாகும். அதாவது ஒவ்வொரு மாத மும் முதல் வாரத்தில் பாடங்கள் கூரியர்** post **மூலம் அனுப்பப்படும். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சிகள் இருக்கும். இப்பயிற்சிகளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இவற்றை திருத்தி, பயிலுபவர்களுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.**
6. **ஒவ்வொரு மாதமும் (இறுதி ஞாயிற்று கிழமையில்) ஒரு நேர்முக வகுப்பு நடத்தப்படுகின்றது. இவ்வகுப்புகளில் அந்த மாதம் அனுப்பிய பாடங்கள் விளக்கப்படுவதுடன் இந்தி மற்றும் ஆங்கில மொழியில் உரையாட (மதிய உணவுடன்) பயிற்சியும் அளிக்கப்படு**

கின்றது. இந்த வகுப்புகள் சென்னை, திருச்சி, கோவை, மதுரை, தஞ்சாவூர், நாகப்பட்டினம், பாண்டிச்சேரி ஆகிய இடங்களிலும், தேவைக்கேற்ப நடத்தப்படுகின்றன.

7. நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக மொழி விளக்க மேம்பாட்டு மையங்கள், திருச்சி, கோவை, மதுரை, தஞ்சாவூர், நாகப்பட்டி ணம், பாண்டிச்சேரி, தில்லி, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான் போன்ற இடங்களில் உள்ளன. தவிர 15 பேர்களுக்கு அதிகமான எண்ணிக்கையில் மாணவர்கள் உள்ள இடங்களில் மொழி விளக்க நிபுணர்கள் உள்ளனர்.

8. **பேச்சு மொழி ஹிந்தி மற்றும் பேச்சு மொழி ஆங்கிலத்திற்கான குறுந் தகடுகள் (சி.டி.) :** அகர உச்சரிப்பிலிருந்து பலவகை சூழ்நிலைகளில் பேசும் பயிற்சிகளைக் கொண்ட சி.டி.க்கள் தயாரிக்கப்பட்டுள்ளன, இவற்றுடன் வழங்கப்படும் துணை நூலை படித்த வண்ணம், இவற்றைக் கேட்டால் மிக விரைவில் மொழியைக் கற்றுக் கொள்ளலாம். (பேச்சு மொழி ஆங்கிலக் குறுந்தகடுகள் பெற விரும்புபவர்கள் 150 ரூபாய்க்கும் மற்றும் பேச்சு மொழி ஹிந்தி குறுந் தகடுகள் பெற விரும்புபவர்கள் 200 ரூபாய்க்கும் டி.டி. அல்லது உள்ளூர் காசோலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.)

9. பயிற்சியில் தேறியவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் Diploma in Conversational Hindi / Diploma in conversational English சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. விழாவில் இது வரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திசேகர், பாரத் ரத்னா சி.சுப்ரமணியம், டாக்டர் கிரண்பேடி ஐ.பி.எஸ்., தமிழ்நாடு மேதகு ஆளுநர் திரு.சுர்ஜித் சிங் பர்னாலா போன்றவர்கள் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள்ளார்.

10. பயிற்சி காலம் ஆறுமாதம் (ஜனவரி முதல் ஜூன் வரை மற்றும் ஜூலை முதல் டிசம்பர் வரை) அடுத்த வகுப்பு ஜனவரி 2010ல் துவங்க உள்ளது.




● 19.11.09 அன்று நடந்த 12-ஆவது பட்டமளிப்பு விழாவில் மேதகு ஆளுநர் திரு.சுர்ஜித் சிங் பர்னாலா பரிசுகளை வழங்கினார்.

11. பயிற்சி கட்டணம் ரூ.1,500 (ரூபாய் ஆயிரத்து ஐநூறு மட்டுமே) நேர்முகப் பயிற்சி, தேர்வுக் கட்டணம் உட்பட)

ஜனவரி 2010ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் ரூ.200க்கான (ஒவ்வொரு பயிற்சிக்கும்) டிமாண்ட் டிராப்ட் அல்லது உள்ளூர் காசோலை SBIOA Institute, Chennai என்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட, தபால் தலையுடன் (ரூ.20) கூடிய உறையில் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும். உறையின் மேல் பேச்சு மொழி ஹிந்தி அல்லது பேச்சு மொழி ஆங்கிலம் மற்றும் பயிற்று மொழியைக் குறிப்பிட வேண்டும். (இந்த ரூபாய் 200/- பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்.

The Executive Director,
**SBIOA Institute,**
229, N.S.C. Bose Road,
P.B. No.1279,
Chennai - 600 001.
Phone : 044-25340226
email : sbioacc@yahoo.com

SBIOA/09

# 'நட்பு'டன் அரசியல்!



**2006** சட்டமன்றத் தேர்தலில் தனித்தே நின்று எட்டு சதவிகிதம் வாக்குகளைப் பெற்றார் விஜயகாந்த். அவரது வாக்கு வங்கியில் 90 சதவிகிதம் இரு திராவிடக் கட்சிகளையும் பார்த்து வெறுத்துப் போன இளைய தலைமுறைதான். இதைக் கண்டு பயந்துபோன திராவிடக் கட்சிகள், இளைஞர்களை வளைத்துப் போடும் காரியத்தில் இறங்கின. 'இளைஞர்கள் பாசறை, இளம் பெண்கள் பாசறை' என்று அ.தி.மு.க.வில் தொடங்கப்பட்டன. சசிகலாவின் உறவினர் டாக்டர் வெங்கடேஷ் என்பவர், தமிழ்நாடு முழுவதும் சுற்றிச் சுற்றி வந்து இந்தப் பாசறைகளைத் தொடங்கி வருகிறார்.

இளைஞர் காங்கிரஸுக்குத் தேர்தல் வருவதைக் காரணமாக வைத்து, அந்தக் கட்சியும் இளைஞர்களை வளைத்துப் போடும் முயற்சியில் இறங்கியிருக்கிறது. இதுவரை பதினெட்டு லட்சம் இளைஞர்களைச் சேர்த்திருக்கிறார்களாம். அன்புமணியும் கிராமம் கிராமமாக விஸிட் செய்து பா.ம.க. பக்கம் இளைஞர்களை இழுக்கிறார்.

இந்த நிலையில் ஆளும் கட்சியான தி.மு.க. மட்டும் சும்மா இருக்குமா? தொடங்கிவிட்டது தளபதி இளைஞர் மன்றம், அன்னை அஞ்சுகம் மகளிர் மன்றம். சமீபத்தில் சென்னை தி.நகரில் இந்த மன்றங்கள் அதிரடியாகத் தொடங்கப்பட்டன. இந்த மன்றங்கள் தொடங்கப்பட வேண்டிய அவசியம் என்ன? - தென் சென்னை மாவட்ட தி.மு.க. செயலாளர் தி.நகர் ஜெ.அன்பழகனிடம் கேட்டோம்.

"தேர்தலுக்குத் தேர்தல் மக்களைச் சென்று சந்திக்காமல் இதுபோன்ற இடைப்பட்ட காலங்களிலும் மக்களோடு தொடர்பில் இருக்க வேண்டுமென்ற எண்ணத்தில்தான் இந்த மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தவிர கலைஞர் ஆட்சியில் எத்தனையோ மக்கள் நலத் திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. அவை சரியான முறையில் அடித்தட்டு மக்களைச் சென்றடைகின்றனவா என்று பார்ப்பதற்காகவும் அந்தத் திட்டங்களின் பலன்களை மக்களுக்குப் பெற்றுத் தருவதற்காகவும்தான் இந்த மன்றங்கள். மன்றங்களில் சேருவதற்கு விண்ணப்பங்கள் கொடுக்கும் போதே, முதியோர் பென்ஷன், திருமண உதவி, கர்ப்பிணிகளுக்கு நிதியுதவி போன்ற திட்டங்களுக்கான விண்ணப்பங்களையும் சேர்த்துக் கொடுக்கிறோம். அவற்றைப் பெறுவதற்கு யாராவது விருப்பம் தெரிவித்தால் அதற்கு உதவி செய்வோம். ஒரு ரூபாய் அரிசி போன்றே இப்போது கலைஞர் காப்பீடு திட்டம் மக்களிடையே சூப்பர் ஹிட். அதில் எல்லோரையும் சேர்த்து விடுகிறோம்.

எங்கள் மன்றங்கள் வாக்குச் சாவடியை அடிப்படையாக வைத்து உருவா

# வாங்கிக்கோங்க... வாக்காளரே!

இந்தப் புதிய யுக்தி, தி.மு.க. தலைமைக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டதாம். தி.நகரில் சட்டமன்றத் தொகுதியில் தோற்றதாலும், தென் சென்னையை அ.தி.மு.க.வுக்குப் பறிகொடுத்ததாலும் அன்பழகன் இது போன்ற மன்றங்களைத் தொடங்கி தி.மு.க. வாக்கு வங்கியை உயர்த்தத் திட்டம் போட்டாராம். தி.மு.க.வின் இந்த அதிரடியை அ.தி.மு.க. உன்னிப்பாகக் கவனித்து வருகிறது என்கிறார்கள்.

''சென்னை போன்ற நகரங்களில் தேர்தலின்போது பணம் கொடுத்தால் விவகாரம் கந்தலாகிவிடும். எனவேதான் இதுபோன்று 'மன்றங்களைத் தொடங்கு கிறேன்' என்று மக்களுக்கு இப்போதி லிருந்தே ஆளும் கட்சியினர் பணம் கொடுக்கத் தொடங்கிவிட்டார்கள்'' என்று குற்றம் சாட்டுகிறார் தி.நகர் தொகுதி அ.தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் கலைராஜன். ''இந்த மன்றங்களில் சேரு பவர்களுக்கு பாண்ட், ஷர்ட், புடைவை வழங்கப்பட்டிருக் கின்றன. கூடவே கவரில் பணம். இவர்கள் என்னதான் தில்லாடித்தனம் காட்டினாலும் வரும் சட்டமன்றத் தேர்தலில் சென்னையில் வெற்றி பெற முடியாது'' என்கிறார்.

கின்றன. ஒரு வாக்குச் சாவடி யில் 1000 வாக்காளர்கள் என்றால் குறைந்தது பத்து மன்றங்களாவது ஏற்படுத்த முயற்சிக்கிறோம். ஒரு மன்றத்தில் அதிகபட்சம் 25 உறுப்பினர்கள் சேர லாம். அந்த வகையில் பார்த்தால் 20 இளை ஞர், மகளிர் மன்றங்கள் அமைப்பதன் மூலம் ஒரு வாக்குச் சாவடியில் 500 வோட்டுகளை நாங்கள் உறுதியாகப் பெற்றிட முடியும். இதுபோன்ற செயல்பாடு 2011ல் எங்களது செல்வாக்கைக் கூட்டும்'' என்று கணக்குப் போட்டுப் பேசுகிறார் ஜெ. அன்பழகன்.

* ஜெ.அன்பழகன்

* கலைராஜன்

தமிழகத்தில் பலவீனமாக உள்ள சுமார் 80 தொகுதிகளில் இதுபோன்ற தளபதி இளைஞர் மன்றங்களையும் அஞ்சுகம் மகளிர் மன்றங்களையும் தொடங்க தி.மு.க. திட்டமிட்டிருக்கிறது.

\- ப்ரியன்

# தெரியாமத்தான் கேட்கறேன்...

'எத்தனை எதிர்ப்புகள் வந்தாலும் பெண்களுக்கு 33 சதவிகித இட ஒதுக்கீடு மசோதா விரைவில் நிறைவேற்றப்படும்.'

- ஜெயந்தி நடராஜன்

**எவ்வளவு விரைவில் காங்கிரஸ் கோஷ்டிப் பூசல் தீர்க்கப்படுமோ, அவ்வளவு விரைவிலா?**

தமிழக அரசுப் பள்ளி ஆசிரியர்களின் குழந்தைகளுள் 80 சதவிகிதத்துக்கும் மேலானோர் தனியார் பள்ளிகளில்தான் படிக்கின்றனர்.

**படிக்கிறதுக்கு தனியார்ப் பள்ளி, பர்ஸுக்கு அரசுப் பள்ளியா?**

மைக்கேல் ஜாக்ஸன் இறுதிச் சடங்குக்கு 5 கோடி ரூபாய் செலவு!

**வீடு வரை உறவு, சமாதி வரை செலவு..?**

'தேர்தலில் இனி எந்தக் கட்சியும் வாக்காளர்களுக்குப் பணம் தருவதில்லை என்ற ஒப்பந்தம் ஏற்பட வேண்டும். அது உருவாக முதல்வர் வழிசெய்து இந்தியாவுக்கே வழிகாட்ட வேண்டும்...'

- ராமதாஸ்

**எந்தக் கட்சியும் மணல் கொள்ளையில் ஈடுபடாதுன்னும் ஒப்பந்தம் போடுவீங்களா?**

சிறப்பான பணி அடிப்படையில் மார்க் போட்டபோது, சென்னையில் எந்த போலீஸ் நிலையத்துக்கும் 'A' கிரேடு கிடைக்கவில்லை!

**சிறப்பான 'மணி' அடிப்படையில் போடத் தோணலியா..?**

**சுருளிப்பட்டி தைலா**

# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை



அன்புடன்
அழைக்கிறது



அனைவரும்
வருக!



## அமரர் கல்கி நினைவு நாள்

**05.12.2009, சனிக்கிழமை மாலை 6.00 மணி**

ராகசுதா அரங்கம், லஸ், மயிலாப்பூர், சென்னை–600004
(நாகேஸ்வர ராவ் பூங்கா பின்புறம்)

**நூல் அறிமுகம்:**

**திரு. கல்கி ராஜேந்திரன் எழுதிய "அது ஒரு பொற்காலம்"**
(கல்கியில் வெளியான "எழுபது முதல் ஏழு வரை" என்ற தொடரின் தொகுப்பு)

**தலைமை:**
**திரு. எம். எஸ். சுந்தரராஜன்**
(சேர்மன், நிர்வாக இயக்குநர்,
இந்தியன் வங்கி)

**நூல் அறிமுக உரை:**
**திரு. திருப்பூர் கிருஷ்ணன்**
(ஆசிரியர், அமுதசுரபி)

**ஆன்மிகச் சொற்பொழிவு:**
**மீனாட்சி கல்யாணம்**

**நிகழ்த்துபவர்:**
**திருமதி தேச மங்கையர்க்கரசி**



# வட்டமேஜை



# மனம் கவர்ந்த 'ஜில்கி'

✉ புறத்தூய்மை - அகத்தூய்மை - மனிதனுக்கு அவசியம் என்பதை உணர்த்திக் கொண்டு இருக்கிற 'திருக்குளங்கள்' பற்றிய கட்டுரை - புண்ணிய நதியில் நீராடிய மன நிறைவைத் தந்தன!

**- என்.சண்முகம், திருவண்ணாமலை**

✉ மூளையைப் பற்றிய செய்திகள் புதுசா இருக்கு!

**- பி.ரம்யா பார்வதி, சின்னமாம்பட்டு**

✉ பல ஆண்டுகளாக திறப்பேனா என்றிருந்த பொன்மணியின் பேனா அவதார புருஷரின் - அவதாரத் திருநாளுக்காக அத்தர் மணம் பரப்பித் திறந்திருப்பது மகிழ்ச்சி!

**- எஸ்.அமிர்தா, வடபழனி**

✉ ஹேவி வாட்டர், வாட்டர் டூரிஸம் என வகை வகையாகத் தந்து எங்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கடித்துவிட்டீர்கள்.

**- என்.சித்தாலட்சுமி, சென்னை - 40**

✉ விடாக்கண்டன், கொடாக்கண்டன்... குண்டக்க...மண்டக்க, ஏட்டிக்குப் போட்டி என்ற பட்டங்களைப் பெற முழுத் தகுதியானவர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்தான்!

**- பி. ஜெயப்பிரகாஷ், பொள்ளாச்சி**

✉ கவிஞர் கதிர் பாரதியின் தூறல் போட்ட கவிதைகள் 'நெஞ்சில் ஜில் ஜில்!'

**- ஜி. ரெஜினா பாலு, பழனி**

✉ ஈழத் தமிழர்களின் விஷயத்தில் முதல்வர் கலைஞரையே, ஒரு முறைக்குப் பலமுறை சிந்திக்க வைத்துவிட்ட மிக அற்புதமான தலையங்கம் சார்! சபாஷ்!

**- புலவர் எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்-1**

✉ பரத்வாஜின் வாரபலனும்கூட வாட்டர் ஸ்பெஷலா? இந்தக் குளிர்காலத்தில் உங்கள் தலையில் ஐஸ் வைத்துப் பாராட்டினால் என்ன?

**-ஜே.துரைராஜ், சென்னை-87**

✉ சச்சின் ரசிகர்களின் உள்ளங்களில், 'தராசு' அவர்கள் மிக நல்ல 'ஸ்கோர்' எடுத்துவிட்டார்!

**- கே.கஸ்தூரி, காட்பாடி**

✉ மரணப் படுக்கையில் இருக்கும் நதிகளைச் சிகிச்சை செய்து நடமாட வைக்க வேண்டும் என்ற மகேந்திரனின் யோசனை, வரவேற்கத்தக்கது.

**- கே.விஜயன், சென்னை - 32**

✉ வாட்டர் ஸ்பெஷலாக வந்த 'கல்கி' எங்கள் உள்ளம் கவர்ந்த 'ஜில்கி!'

**- என்.ஏ.லதா, பழனி**



# கல்கி



2009 டிசம்பர் 6
விரோதி கார்த்திகை 20
மலர் : 68
இதழ் : 19

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## லிபரான் அறிக்கையின் தொலைநோக்கு!

பதினேழு ஆண்டு காத்திருப்புக்குப் பிறகு பாப்ரி மஸ்ஜித் தகர்ப்பு தொடர்பான ஆய்வு அறிக்கை வெளியிடப்பட்டிருக்கிறது! அந்த அறிக்கையில் அடங்கியுள்ள விஷயங்களைக் குறித்து அர்த்தமுள்ள விவாதங்கள் எழுவதற்கு முன்னரே, அது கசிந்து வெளிப்பட்டதைக் குறித்துதான் நாடாளுமன்றத்தில் அதிகக் குழப்பம் எழுந்துள்ளது; ஒத்தி வைப்பும் நிகழ்ந்துள்ளது!

நமது நாட்டு திசைதிருப்பும் அரசியலின் மற்றும் ஓர் உதாரணம் இந்த நிகழ்வு! பா.ஜ.க.வுக்கு எதிராக மக்கள் கவனத்தை அதிகபட்சமாகக் கவர, அரசு தரப்பில் அறிக்கை வேண்டுமென்றே கசியவிடப்பட்டிருக்கக் கூடும். இந்த முறைகேட்டையே பா.ஜ.க. பெரிதுபடுத்தி, தனது தலைவர்கள் மீதான குற்றச்சாட்டுகளிலிருந்து மக்களுடைய கவனத்தைத் திசை திருப்பப் பார்க்கிறது!

மதவாத அரசியலும் ஜாதி அரசியலும் சிறுபான்மை அரசியலும்கூட இதே போன்ற திசைதிருப்பும் முயற்சிகள்தான்! நாட்டில் உணவு, விலைவாசி, வேலை வாய்ப்பு, சுகாதாரம் என்று ஒவ்வொரு துறையிலும் தீர்க்கப்படாத பிரச்னைகளும் திணறடிக்கும் சவால்களும் காத்திருக்க, அரசியல்வாதிகளுக்கு அவற்றை எதிர்கொண்டு முன்னேற்றப்பாதை வகுப்பதென்பது கடினமான பணி. அதற்கு உண்மையும் உழைப்பும் நிபுணர்களின் அறிவுரையை நாடி ஏற்கும் பக்குவமும் அவசியம். ஆனால், அரசியல்வாதிகளின் தேர்வு என்பது, இந்தக் கடினமான நேர்வழிப் பாதை அல்ல, பதவி என்ற குருட்டுக் குறிக்கோளை









நோக்கிச் கலபமாக அழைத்துச் செல்லும் அபாயகரமான குறுக்கு வழிகளே அவர்களது தேர்வு!

லிபரான் அறிக்கை, இந்த அபாயத்தைக் குறித்துதான் முக்கியமாக எச்சரிக்கிறது. ஜாதி-மத - இன பேதங்கள்/உணர்வுகளைப் பயன்படுத்தி, அதிகாரத்தைக் கைப்பற்றும் அனைத்து வழிமுறைகளையும் சட்டவிரோதமாக்கும் வகையில் சட்டத் திருத்தங்களை சிபாரிசு செய்கிறது அவ்வறிக்கை. வாஜ்பாய் முதல் பஜ்ரங் தளத் தலைவர்கள் வரையிலான 68 பேர் மீது குற்றச்சாட்டு கூறும் லிபரான் அறிக்கை, அவர்கள் மீது நடவடிக்கை எதையும் பரிந்துரைக்கவில்லை! 'பதினேழு ஆண்டுகள் சென்று, குற்றம் சாட்டப்பெற்ற கட்சி இருமுறை ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்தபிறகு, நடவடிக்கை எடுப்பதில் என்ன அர்த்தம் இருக்க முடியும்?' என்று கமிஷன் கருதியிருக்கலாம். அல்லது, நடவடிக்கை பரிந்துரைக்கப்பட்டால் மதக் கலவரம் வெடிக்கக்கூடும் என்றும் எண்ணியிருக்கலாம்.

எவ்வாறாயினும், லிபரான் அறிக்கையின் விளைவாகக் குற்றச்சாட்டுகள் ஒருவேளை பதிவானாலும் எந்தத் தலைவரும் தண்டனை பெறப் போவதாகத் தோன்றவில்லை! வழக்குகள் இழுக்கடிக்கப்படுமே தவிர, தீர்ப்புகள் வராது!

ஆனால், 1992ல் நிகழ்ந்தது போன்ற ஒரு கொடுமையால் மக்கள் மீண்டும் தண்டிக்கப்படக் கூடாது; இந்தத் தொலைநோக்கு லிபரான் அறிக்கையில் இருக்கிறது. அதனால்தான் குறுகிய ஜாதி-மத பேதங்களை அரசியலமைப்பிலிருந்து முற்றிலும் நீக்குவதற்கான வழிமுறைகளை அது சிபாரிசு செய்கிறது; அதற்குப் பல சீர்திருத்தங்களை முன்வைக்கிறது. அரசுதான் அதன் பேரில் விரைந்து நடவடிக்கை எடுக்க வேண்டும். இந்த முயற்சிக்கு எதிர்க்கட்சிகளும் முழு ஒத்துழைப்பு தந்து பெருமையடைய வேண்டும்.

லிபரான் அறிக்கை என்ற பழத்தை உரித்து எறிந்துவிட்டு, தோலைத் தின்று என்ன பயன்? ○



# நாங்களும் 'திக்' ஃப்ரெண்ட்ஸ்!

சமீபத்தில் விஜய் டீ.வி. கொண்டாடிய 'கமல் 50' ப்ரோகிராம்ல என் வளர்ச்சிக்குக் கமல்தான் காரணம்னு ரஜினி சொல்ல... கமல் உடனே ரஜினியைக் கட்டிப்புடிச்சு ''இந்த மாதிரி ஃப்ரெண்ட்ஷிப் போன தலைமுறையிலும் இல்ல. இனி வர்ற தலைமுறையிலும் இருக்காது''ன்னு சொல்லியிருக்கறார். அவங்க மட்டும்தான் திக் ஃப்ரெண்ட்ஸா...

## வாசகர்களுக்குப் போட்டி

**கடைசி தேதி 12.12.09**

நாங்களும்தான்னு சொல்றீங்களா வாசகர்களே! அப்படின்னா... பேப்பரை எடுங்க. உங்க ஃப்ரெண்டைப் பத்தி, ஃப்ரெண்ட்ஷிப் பத்தி சுவையான சம்பவத்தை ஒரு பக்க அளவில் எழுதி அனுப்புங்க. நினைவா உங்க ஃப்ரெண்டோட எடுத்துக்கிட்ட பசுமையான ஃபோட்டோவையும் வெச்சு அனுப்புங்க. இல்லேன்னாலும் பரவாயில்ல...

கீழே இருக்கும் கூப்பனைக் கத்தரித்து கவர் மேல ஒட்டி அனுப்புங்க. எங்க நட்பும் சளைத்தது அல்லன்னு உலகத்துக்குப் புரிய வைங்க.

- தேர்ந்தெடுக்கப்படும் சிறந்த 10 பெஸ்ட் ஃப்ரெண்ட்ஷிப்புக்கு கிஃப்ட் உண்டுங்க.
- ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**'திக்' ஃப்ரெண்ட்ஸ் போட்டி**

ஆசிரியர், கல்கி,
கல்கி பில்டிங்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032

பசுவுக்கு (கோமாதா) இணையாக எந்த தெய்வமும் உலகத்தில் இல்லை

காஞ்சி மஹா பெரியவாள் துணை

# பசு மடம்

வயதான பசுக்களை பராமரிக்கும் இல்லம்
ஆதரவற்ற பசுக்களை பாதுகாக்கும் இல்லம்
ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களை பேணும் இல்லம்

பெருமாளகரம், திருவேற்காடு (P.O.), சென்னை-77
TEL: 044 - 3299 9888 Fax: 044 - 4206 6525

## வயதான பசுக்கள் வாழ நீங்கள் உதவுங்கள்...

## ஆதரவற்ற நாங்களும் மாட்டு பொங்கலை கொண்டாட உதவி செய்யுங்கள்


பசு மடத்தில் உள்ள வயதான பசுக்கள்

பொங்கல் மற்றும் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்! அனைத்து தெய்வங்களையும் தன்னுள் அடக்கிய கோமாதாவான பசுவை மகாலட்சுமியாகவே கருதி வழிபடுவது இந்து மதத்தின் சிறப்பு. நடமாடும் திருமகளான பசுவிற்கு வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு பூஜை செய்து வழிபடுவது வழக்கம். கோயில்கள் மற்றும் வீடுகளில் நடக்கும் விழாக்களில் பசுவிற்கு முதலில் பூஜை செய்த பின்னரே மற்ற நிகழ்ச்சிகள் தொடங்குகின்றன. பசுவின் பாலும் மற்றும் அதன் பொருட்களும் நோயற்ற வாழ்க்கை வாழ உதவுகிறது. தினமும் காலையில் வீட்டு வாசலில் பசுவின் சாணத்தை தெளித்து அழகாக கோலமிடுவதால் கிருமிகள் உள்ளே வராமல் தடுக்கப்படுகிறது. பசுவின் சாணத்தில் இருந்து கிடைக்கும் சாம்பலைத் தான் புனிதமான விபூதியாக அணிகிறோம். விபூதி பூசுவதால் தீய சக்திகள் நம்மைவிட்டு நீங்குகின்றன. பசுவின் கோமியம் ஜலதோஷம், தலைவலி போன்ற வியாதிகளையும் போக்கவல்லது. இப்படி தனக்கென வாழாத பசுக்களை வயதான காலத்தில் பராமரிக்க வேண்டியது நமது தலையாய கடமையாகும். வயதான பசுக்களால் இனி பலனில்லை என்றவுடன் சிறிதும் இரக்கமின்றி படுகொலை செய்ய கசாப்பு கடைகளுக்கு அனுப்புவது பெரிதும் கொடுமை. பசுக்கள் இவ்வாறு கொல்லப்படுவதை தடுக்கவும் வயதான பசுக்களை பாதுகாக்கவும், வீட்டுக்கு ஒரு பசு வளர்க்க வேண்டும் என்ற விழிப்புணர்வை ஏற்படுத்தவும் சட்ட விரோதமாக இறைச்சிக்காக தமிழகத்தில் இருந்து வெளி மாநிலங்களுக்கு பசுவை அனுப்புவதை தடுக்கவும் பசுமடம் என்ற காப்பகத்தை ஏற்படுத்தி, மகா பெரியவாள் ஆசியோடு 12 ஆண்டுகளாக 100 பசுக்களுக்கு மேல் பராமரித்து வருகிறோம். இவைகள் இயற்கையாக மரணம் அடையும் வரை இங்கு பராமரிக்கப்படுகிறது. கிராமங்கள் தோறும் சிறப்பு கால்நடை பாதுகாப்பு முகாம் அமைத்து பசுக்களுக்கு சிகிச்சை அளிக்கிறோம். இந்த காப்பகத்தின் மூலம் கசாப்புக் கடைகளுக்கு அனுப்பும் முன் வயதான பசுக்களை வாங்கியும், கோயில்களில் ஏலம் விடப்படும் பசுக்களை பெற்றும் இறுதி காலம் வரை அவை நிம்மதியாக, சுகமாக வாழ வைப்பதே பசுமடத்தின் முக்கிய நோக்கமாகும். பசுவதை தடுப்பு திட்டத்தை வலியுறுத்தி, மாவட்டம் தோறும் பசு பாதுகாப்பகம் அமைத்து உதவுகிறோம். அன்னைக்கு ஈடாக அமுது பொழியும் பசுக்களை பாதுகாக்க மாட்டு பொங்கல், புது வருடம் அல்லது விசேஷ தினங்களில் தங்களால் முடிந்த நன்கொடைகளை பராமரிப்பு செலவிற்கு அனுப்பி இப்புனிதப் பணியில் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டுகிறோம். இந்த பசுமடத்தை பார்வையிட்ட பின்னும் நீங்கள் உதவி செய்யலாம்.

**பசுமடத்தில் உள்ள வயது முதிர்ந்த, பால் வற்றிய, ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களின் ஆகாரத்திற்கு உங்கள் அன்புக் காணிக்கையை கனிவுடன் மனமுவந்து தாரீர்!**

**பசு மடத்தில் உள்ள வயதான நோயுற்ற பசுக்களில் ஒரு பசுவை பராமரிக்க**



| | | |
|---|---|---|
| ஒரு வாரத்திற்கு | ரூ.105 | அனுப்புவோருக்கு கோமாதா வண்ணப்படம் அனுப்பிவைக்கப்படும் |
| ஒரு மாதத்திற்கு | ரூ.465 | அனுப்புவோருக்கு வெள்ளியிலான பெருமாள் டாலர் அனுப்பிவைக்கப்படும் |
| மூன்று மாதத்திற்கு | ரூ.1350 | அனுப்புவோருக்கு வெள்ளியிலான ஸ்ரீராமர் பாதம் 2 அனுப்பி வைக்கப்படும் |
| ஆறு மாதத்திற்கு | ரூ.2700 | அனுப்புவோருக்கு வெள்ளியிலான தவழும் கண்ணன் அனுப்பி வைக்கப்படும் |
| ஒரு வருடத்திற்கு | ரூ.5400 | அனுப்புவோருக்கு பெரிய வலம்புரி சங்கு ஒன்று அனுப்பி வைக்கப்படும் |
| 100 பசுக்களுக்கு ஒரு நாள் | ரூ.1500 | அனுப்புவோருக்கு வெள்ளியிலான கோமாதா விக்ரகம் அனுப்பிவைக்கப்படும் |

**கோதானத்திற்கு மிஞ்சி ஒரு புண்ணியமும் இல்லை. பரிகாரத்துக்கு அதுவே பெரிய மருந்து**

பொங்கல், புத்தாண்டு, முக்கிய நாட்களில் கோதானம் செய்தால் பித்ரு தோஷம், நாகதோஷம், செவ்வாய் தோஷம் நீங்கும். புத்ர பாக்கியம், தடைபட்ட திருமணம் கைகூடும். குடும்பத்தில் மங்கல நிகழ்ச்சிகள் நடைபெறும். கோதானம் செய்ய ரூ.9,000/- அனுப்புபவர்களுக்கு பித்தளையிலான பெரிய கோமாதா விக்ரஹமும் வெள்ளியிலான ஐஸ்வர்ய பெருமாள் விளக்கும் அனுப்பி வைக்கப்படும்.

**108 பசு மற்றும் கன்றுகளுக்கு கோபூஜை செய்தால் பூமியை வலம் வந்து வணங்கிய பலன் கிட்டும்**

பசுவை பாதுகாக்க மேற்கண்ட நன்கொடையை அனுப்பும் அன்பர்களுக்கு தாங்கள் விரும்பும் தேதியில் 108 பசுக்களுக்கு கோபூஜை செய்து, அகத்தி கீரை, அருகம் புல், கரும்பு எள் உருண்டை, வெல்லம், வெண் பொங்கல் போன்ற உணவை அளித்து, பிரசாதத்துடன் மேற்கண்ட பூஜிக்கப்பட்ட பொருட்கள் மற்றும் கோமாதா வண்ணப்படம் அனுப்பி வைக்கப்படும். பசுவின் ஆகாரத்திற்கு ரூபாய் அனுப்பும்போது யார் பெயருக்கு கோபூஜை செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர் திதி மற்றும் கோத்திரம் போன்ற விவரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடையை Cheque / D.D/ M.O.ஆக Shri Ghosala Seva Trust, Chennai என்ற பெயருக்கு மேற்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம். நன்கொடைகளுக்கு 80ஜி பிரிவின்படி வரி விலக்கு உண்டு.

**SAVE THE HOLY COW FROM THE SLAUGHTER HOUSES**

''ஸார்! நம்ம வாழ்க்கையே கொண்டாட்டம்தான். கொளுத்துற வெயிலுக்குப் பிறகு குளிர்ச்சியா மார்கழி வந்தா அதையும் கொண்டாடுற நாம மகளிர் தினம், அன்னையர் தினம், குழந்தைகள் தினம்னு ஃபேமிலியில் ஒவ்வொரு டிபார்ட்மெண்ட்டா கொண்டாடுறோம். இந்த ஆண்கள் தினம் மட்டும் ஏன் இல்ல? சமத்துவம், ஆண்-பெண் நட்பு பத்திப் பேசினா மட்டும் போதாது. ஆண்களின் உழைப்பு... (மகனாக, தந்தையாக, கணவனாக) எவ்வளவு அவசியமானது, அவன் எவ்வளவு முக்கியம்னு நாம கொண்டாடி ஒத்துக்கிட்டு இன்னும் அவர்களை பாஸிடிவ் ரோல் மாடலா மாத்த இது ஒரு பெஸ்ட் ஒப்பனிங்னு நாங்க நினைக்கிறோம்'' என்று சுடிதார் தேவதையொன்று காலேஜ் ஆண்களின் மத்தியில் மத்தாப்பூ போலப் பொரிய.. நாயகன்களின் முகமெல்லாம் பெருமித வெளிச்சம் பிரதிபலித்தது. ஆட்டம், பாட்டம், பட்டிமன்றக் கொண்டாட்டத்துல 'எங்கெங்கு காணினும் சக்தியடா'ன்னு பெண்கள் கூட்டம்தான்! (இதுல மயங்கிய சிவன்கள் எழுந்திருக்க எவ்வளவு நாளாகுமோ... ''மச்சி சாய்ச்சிப்புட்டாடா'' உபயம்: வடிவேலு)






சேலம் கோட்டை மாரியம்மன் பாலிடெக்னிக் கல்லூரி வளாகத்தில் கட்டியிருந்த 'சாதிப்போம் வா தோழா!' என்ற பேனரின் அறுந்த ஒரு கயிற்றை மூன்று பெண்கள் ஏறிக் கட்டிக் கொண்டிருந்தது கண் கொள்ளாக் காட்சி. விழாவை ஏற்பாடு செய்த முதல்வர் மோகனுக்கு சபாஷ் போடலாம்.

* பாரத கங்கை





# பெஸ்ட்



* ஒரு பெஸ்ட் ஓப்பனிங்கான பட்டிமன்றம்

"இந்த நூற்றாண்டில் ஆண்கள் தினம் கொண்டாடுவது அவசியம்ங்க. எல்லாத் துறையிலும் ஆண்களின் கையே முதன்மையா இருந்த நிலைமை மாறி, இப்போ பெண்கள் சமமான நிலைக்கு வந்துட்டாங்க. ஆண்கள் தங்கள் வேலை வாய்ப்பு பறிபோனதற்கும், தாங்கள் முக்கியத்துவம் இழந்து போனதற்கும் பெண்கள்தான் காரணம்னு நினைக்க ஆரம்பிச்சுட்டாங்க. மனசுல இது ஒரு விரோதத்தை உண்டாக்கிடும். அது தப்புங்கிறத நட்பால, கொண்டாட்டத் தால ஆண்களுக்குப் புரிய வைப் பதும் சாந்தப்படுத்துவதும்தான் இந்த விழாவின் ஆணிவேர் அம்சம் என்பது என் கருத்து'' என்கிறார் கோவை பாரதி மேல்நிலைப் பள்ளியின் தமிழாசிரியர் பாரத கங்கை.

- ஆர்.பாலா

# ஓப்பனிங்!



பெண்ணியச் சிந்தனை, பெண் விடுதலை, பெண் படைப்பாளிகள் குறித்து தொடர்ந்து தமது காத்திரமான கருத்துகளை முன்வைப்பவர் எழுத்தாளர் பிரபஞ்சன். ஆண் - பெண் நட்பு எதிர்கொள்ளும் சிக்கலும் சவாலும் பற்றி பிரபஞ்சன், கவிஞர் தமிழ்மணவாளனோடு உரையாடியதிலிருந்து சில பகுதிகள்...

**சமீபத்தில் பெண் கவிஞர் ஒருவரின் கவிதைத் தொகுப்பை வாசிக்கிறபோது 'பால் தகர்த்த நட்பு' எனும் சொல்லாடல் என் கவனத்தை ஈர்ப்பதாக இருந்தது. பால்பேதத்தை நட்பு கடப்பது பற்றி...**

''பால் தகர்த்த நட்பு என்கிற சொல்லாட்சி மிகவும் அர்த்தம் பொருந்தியது. கவிஞர் விஜயலட்சுமிதான் அந்தச் சொல்லைக் கண்டடைந்தார் என்று நினைக்கிறேன். தகர்த்தல் என்றால் தேவையில்லாததை அல்லது தடுப்பதை அல்லது மறிப்பதை நீக்குதல் என்று புரிந்து கொள்கிறேன். நண்பர் இருவருக்குள் ஒருவர் பெண்ணாகவும், ஒருவர் ஆணாகவும் இருக்க நேர்ந்தால், அந்தப் பால் வேறுபாடு ஒரு பொருட்டாகுமா என்றால் ஆகாது என்பதே என் பதிலும், என் அனுபவமும்.

துறை, தளம் எது அவர்களை நண்பர் களாக்கியதோ அதைத் தொடர்ந்து பற்றி முன் சென்று, வளர்த்தெடுத்தலே நண்பர்கள் கொள்ள வேண்டிய நெறி. அறிவும், ஞானமும், மனமும், தோழமையும் பால் கடந்த சொற்கள்.

தோழமைக்குப் பால் பேதமும் இல்லை. ஆண் தோழமை, பெண் தோழமை என்றெல்லாம் சொற்கள் இல்லாமைக்குக் காரணம், தோழமையில் ஆண் பெண் இல்லை என்பதேயாகும்.

என் நண்பர்களில் பலர் பெண்கள். வானத்தின் கீழ் உள்ள எது குறித்தும் நாங்கள் உரையாடுவோம். காதல், காமம், கல்வி என்று எதைப்

# பிரபஞ்சன் பேட்டி

பற்றியும். பேசும் விஷயம் மட்டுமே, எங்கள் நடுவில் இருக்கும். அறிவு நாட்டமும் புரிதல் உணர்வும் மேலோங்கும் இடத்தில் உடம்பு கரைந்து போய் விடுகிறது. அந்த இருவருக்கும் இடையேயுள்ள ஏதோ ஒரு பொதுத் தன்மைதான், பொது ஒன்றுதல்தான், பொது ரசனைதான், பொது மரியாதைதான் அவர்கள் இருவரையும் ஒன்று சேர்க்கிறது. நண்பர்கள் முதலில் பரிசிலீக்க வேண்டியது, இந்த நட்பு எதன் பொருட்டு என்பதைத்தான்.

உடம்பு என்பது பூதமல்ல. பேய் பிசாசல்ல. நாம் சுமந்து திரிவது அது. நகைப் பெட்டி மாதிரி, நாம் நம்மைப் போட்டு வைத்திருக்கும் சதைப் பெட்டி அது. அது,

> “நண்பர்கள் முதலில் பரிசீலிக்க வேண்டியது. இந்த நட்பு எதன் பொருட்டு என்பதைத்தான்.”






ஆண் - பெண் நட்பின் தேவை மிகவும் அவசியமான சமூக, அலுவலகச் சூழலில், இந்த நட்பை சமூகம் எப்படி எதிர் கொள்கிறது?

''மிகுந்த ஜனநாயகபூர்வமான வாழ்க்கை நமக்கு இப்போதுதான் வாய்த்திருக்கிறது. 13-ம் நூற்றாண்டில் ரசியா சுல்தானா என்கிற பெண் சுல்தான் ஆவதை, டில்லி அரசியல் ஏற்கவில்லை. ரசியா ஏற்க வைத்தாள். 20-ம் நூற்றாண்டு முத்துலட்சுமி ரெட்டி, புதுக்கோட்டை சாலைகளில் கல்லூரிக்குப் போவதைக் கண்டு சமூகம் வெகுண்டது.

# பால் தகர்த்த நட்பு!

அந்த இருவருக்கும் இடையே, ஒரு நாய்க்குட்டி மாதிரி, வந்து உரசாதா என்றால் உரசவும் சில வேளைகளில் சாத்தியம்தான். அந்தக் காலத்தில், நட்புக்கு ஒரு முக்கால் புள்ளி இட்டுவிட்டு, முகமூடியின் துணையின் பின் போகாமல், நேர்மையாக உட்கார்ந்து பேசி, நாம் நம் வெளிகளைக் கடந்து போகிறோமா, அல்லது அறைக்குள் பிரவேசிக்கிறோமா என்கிற சுய பரிசோதனைக்குப் பின் முடிவு செய்து கொள்வது சிநேகத்தின் வண்ணப் பூச்சை அழியாமல் காக்கும். நான் அறிந்த பல பேர், உடம்பை மறந்து அல்லது கடந்து சினேகிப்பவர்களே. நீங்கள் ஆண்களாக இருந்தால் நட்புக்கு உகந்தவர்கள் பெண்கள். பெண்களாக இருந்தால் ஆண்கள். நான் பெண்களால் வளர்க்கப்படுபவன்.''

இன்று, பெண்ணும் ஆணும் இணைந்து பணியாற்றும் அழகிய வெளி நமக்கு வரமாகியிருக்கிறது. இருந்தும், அதற்கான தகவு வாய்க்க வில்லை. பணி இடங்களில் பெண் ஆண் நட்பு, ஒரு ரகசியப் பூந்தோட்டத்துக்குப் பயணமாகும் பிரயத்தனமாகவே கருதப்படுகிறது.

இந்திய ஆண்களின் மூளைகள் பல நூற்றாண்டு வரலாற்று, பண்பாட்டு, ஒடுக்குமுறைக் காரணிகளால், 24 மணி நேரக் காமப்பட்டறைகளாகவே செயல்படுகின்றன. பெரும்பாலான ஆண்களின் மூளைகளுக்குள் நிறைவடையாத, நிறைவடையாத காரணத்தாலேயே கோணல்களாகவும், கசடுகளாகவும் இறுகிப் போன, எரியும் தாபங்களின் சாம்பல்கள் படர்ந்திருக்கின்றன. இதன் இன்னொரு வெளிப்பாடு,

பெண் அதிகாரியை உதாசீனப்படுத்துதல், சக பெண் ஊழியரைச் சீண்டுதல் நடக்கின்றன. அலுவலகப் பெண் ஊழியர்களைத் தன் வீட்டுக்கு அழைத்து வரும் ஆண் ஊழியர்கள் உண்டு. பெண் ஊழியர்கள் தங்கள் ஆண் நண்பர்களை அழைத்து வருதல், ஒரு பிரளயத்தை உருவாக்குதல் ஆகும். நம் தேசத்தில் பெண்களுக்கு ஆண் நண்பர்கள் இன்றும்கூட அதிசயம். ஒட்டுமொத்த சமூகத்தின் மனோபாவம் தான் அலுவலகத்தில் எதிரொலிக்கும்.''



**நீங்கள் ஆண்களாக இருந்தால் நட்புக்கு உகந்தவர்கள் பெண்கள்.**



**ஆண் - பெண் நட்பு எதிர்கொள்ளும் சிக்கலைக் களையும் பணி எங்கிருந்து தொடங்க வேண்டும்?**

''இந்தியாவில்தான் குழந்தைகள் ஆண் குழந்தைகளாகவும், பெண் குழந்தைகளாகவும் பிறக்கிறார்கள். குழந்தைகள் மனத்தில் பால் பேதத்தை விதைப்பது, மிகப் பெரும் பிழை. பெண் குழந்தைக்குச் சட்டி பானையும், ஆண் குழந்தைக்குத் துப்பாக்கிப் பொம்மையும் வாங்கித் தரும் பெற்றோர்கள், விஷ விதையை விதைக்கிறவர்கள். பள்ளிக்கூடத்தில் இரண்டாம் வகுப்பில்கூட ஆண் பெண் குழந்தைகள் தனித்தனியாக அமர வைக்கப்படுவது, பேருந்துகளில், பொது இடங்களில் தனித்தனி இருக்கைகள் என்பதெல்லாம் பெண் ஆண்களைப் பால் வேறுபாட்டு, உயர்வு தாழ்வுச் சிக்கல்களுக்குள்ளாக்கி விடுகின்றன. இதன் மோசமான எதிர்விளைவு, பெண்தான் இரண்டாம் பாலினம் என்று நம்பச் செய்கிறது. குழந்தைகளைப் பிரித்து வைத்து வளர்த்தல், கடுமையான மனநிக் கோளாறுகளை உருவாக்கும் அபாயச் செயல். உடம்பின் புதிர்களை உரிய நேரத்தில், உரிய விதத்தில் அவர்களே அறிந்து கொள்ளச் செய்வதுதான் ஒரு ஆரோக்கியச் சமூகத்துக்கு அழகு.''

## சந்தர்ப்பம் வாய்க்காதவரை..



**ஆண் - பெண் நட்பு பற்றி சிவகாசியிலுள்ள மதி மருத்துவமனை நிர்வாக இயக்குனர் திலகபாமாவிடம் கேட்டபோது...**

தகவல் தொழில்நுட்பம், வேலை வாய்ப்பு, ஆண் - பெண் நட்பை அதிகப்படுத்தி அதீத வியப்பை பெண்களுக்கு ஏற்படுத்தி இருக்கிறது.

பெண்கள் - இந்த நட்பை நட்பாகத் தான் பார்க்கிறார்கள். காரணம் கற்பு, சமூகம், மரபால் அவர்கள் பக்குவப்படுத்தப்பட்டுள்ளனர்.

ஆண்களுக்கான சந்தர்ப்பம் வாய்க்காத வரைதான் பெண்களுடனான அவர்களது நட்பு உறவாக மாறாமல் இருக்கிறது. காரணம் ஆண் உடலை நோக்கியே நகர்கிறான். பெண்ணோ மனத்தை நோக்கி நகர்கிறாள்.

இதனால் சமூகம் இந்த உறவை இன்னமும் சந்தேகத்துடன்தான் பார்க்கிறது. நட்பையும் காதலையும் இனம் பிரிக்க அது இன்னும் கற்றுக் கொள்ளவில்லை.

**ஆண் - பெண் நட்பு பாராட்டுகிறவர்கள் அவர்களின் பங்காக தங்களது நேர்மையை உறுதிப்படுத்திக் கொள்ளும் ஒரு கோட்டை (எல்லை) நிர்மாணிக்க வேண்டுமல்லவா?**

''நல்ல நட்பு நேர்மையை நிரூபிக்கக் கோராது. தவிரவும், யாருக்கும் தங்கள் நேர்மையை நிரூபிக்கும் நிலையிலும் அவர்கள் இருக்க மாட்டார்கள். அதற்கு அவசியமும் இல்லை. பெண் ஆண் நட்புக்கிடையில் ஏதேனும் வரம்பு மீறுதல் நிகழ்ந்து விடுமோ என்கிற சமூகத்தின் பதற்றத்தை சமூகவியலாளர்கள் கொள்ளவும் அவசியமும் இல்லை.''

சந்திப்பு : **தமிழ்மணவாளன்**

படம்: **மணிமேகலை நாகலிங்கம்**




**கொ**ல்கத்தாவின் பாலிகஞ்ச் பகுதியிலிருக்கும் ஹோட்டல் பார்க் பேலசுக்குச் சொந்தமான லிஃப்ட் அவனைச் சுமந்தபடி மூன்றாவது தளத்துக்கு உயர்ந்து கொண்டிருந்தது. ரிஃப்ளக்டரில் எண் மூன்று பளிச்சிட்டதும் ஆங்கிலத்தில் பெண்குரல் ஒன்று அதனை பெல் சப்தத்துடன் அறிவித்ததும், லிஃப்டின் கதவு இரண்டாகப் பிளந்து அவனது பூட்ஸ் கால்களுக்கு லாபியின் சிவப்புக் கம்பளத்தைக் காண்பித்தது. இப்போது அவன் பெட்டியிலிருந்து வெளியேறி இடப்பக்கமாகத் திரும்பி அறை எண் 314ஐ நோக்கி லாபியில் நடந்து கொண்டிருக்கிறான்.

**அ**வன்....... இரண்டு நாட்களுக்கு முன் வைசாக் ரயில் நிலையத்தில் தேன்மொழிக்கு உதவி செய்தவன். சந்தித்த சில நொடிகளுக்குள் தேன்மொழி தன் வாழ்வின் மொத்தப் பாதுகாப்பையும் உணரச் செய்தவன். இறுதியாக தான் யார், எந்த ஊர், பெயர் விவரம் எதுவும் சொல்லாமல் அவளுக்குள் ஒரு கத்ரீனா புயலை உருவாக்கி ஆட்டோவில் ஏற்றி அனுப்பி வைத்தவன்.

பெயர் சூர்யா...

வேலை சென்னையில்.... ஸ்டெம் செல் என்ற நவீன மருத்துவத் துறையில் சேவை செய்துவரும் ஒரு தனியார் நிறுவனத்தின் விற்பனை அதிகாரி.

இதோ அறையின் கதவைத் திறந்து உள்ளே நுழைகிறான். அவன் சுவிட்சைப் போட்டு உடைமாற்றிக்கொண்டு பாத்ரூமுக்குள் நுழைந்து வெளிவருவதற்குள் இன்னும் சில கூடுதலான தகவல்கள்.

ஸ்டெம் செல் அப்படி ஒன்றும் கம்ப சூத்திரமோ சிதம்பர ரகசியமோ இல்லை. குழந்தை பிறந்தவுடன் அதன் தொப்புள் கொடியையும் அதன் ரத்த அணுக்களையும் சேகரித்து வைத்து, பிற்பாடு அந்தக் குழந்தை வளர்ந்து வரும்போது உடலில் ஏற்படும் ரத்தம், எலும்பு, இதயம் மற்றும் முதுகுத்தண்டு பிரச்னைகள் அனைத்துக்கும் சுலபமாகத் தீர்வு காண்பதுதான் இந்த ஸ்டெம் செல் மருத்துவத் துறையின் பணி. இதன் அடுத்த கட்ட வளர்ச்சியாக இன்னொரு ஆராய்ச்சியும் நடந்து வருகிறது. அதன் பயன் என்ன தெரியுமா... ஒரு வேளை நாளைக்கே யாருக்காவது மவுண்ட் ரோட்டில் அடிபட்டு ஒரு கை முழுவதுமாகத் துண்டிக்கப்பட்டு விட்டால்கூட கவலையே படவேண்டாம். இன்னொரு கையால் செல்ஃபோனை எடுத்து நம்பரைத் தட்டி



னால் போதும்; ஏற்கெனவே உங்கள் உடம்பில் இருக்கும் அதே எலும்பு, சதையுடன் கூடிய புது கை ஒன்றைக் கொண்டு வந்து உடலில் பொருத்திவிட்டு அந்தக் கையாலேயே நீங்கள் தரும் சர்வீஸ் சார்ஜையும் வாங்கி பாக்கெட்டில் போட்டுக்கொண்டு போவார்கள்.

இந்தியா முழுக்க இருக்கும் பல்வேறு டாக்டர்களைச் சந்தித்து ஸ்டெம் செல்லை அறிமுகப்படுத்தி அவர்கள் மூலமாக மகப்பேறு தம்பதிகளையும் அவர்களது குழந்தைகளையும் தங்களது வங்கியில் உறுப்பினராகச் சேரவைக்க வேண்டும். கொல்கத்தாவில் மொத்தம் மூன்று டாக்டர்களைச் சந்தித்து, அவர்களிடம் விளக்கமாக ஸ்டெம் செல் என்றால் என்ன? அதன் பயன் யாது? என்பது குறித்து எடுத்தியம்புவதற்காகத்தான் அவன் இங்கு இரண்டு நாட்களுக்கு முன் வந்திருந்தான்.

வரும் வழியில் தேன்மொழிக்கு உதவி செய்யப்போய் உண்டான காலதாமதத்தினால் இரண்டு டாக்டர்களை மட்டுமே அவனால் சந்திக்க முடிந்தது.

டாக்டர் காஞ்சன் முகர்ஜி, மகேந்திர கோஷ் ஆகியோர் அவன் சொல்ல வரு

# பகல் மீன்கள்





## கடவுளின் நட்பு!

**ந**ட்பு பற்றி 'நச்'சுன்னு சொல்லுங்களேன்னு தமிழக அரசின் வாழ்நாள் சாதனையாளர் விருது பெற்ற டாக்டர் அமுதா ஹரியைக் கேட்டபோது...

''நட்பிலே சிறந்தது கடவுளின் நட்புதான். அதை மாறாத சேவையால் மட்டுமே பெற முடியும். அதனால்தான் கர்ப்பமுற்ற, எச்.ஐ.வி.யால் பாதிக்கப்பட்ட ஐந்நூறு பெண்களுக்கு விசேஷ சிகிச்சை அளித்து பிரசவம் பார்த்து, அவர்களின் குழந்தையை நோயின்றிப் பிறக்க வைத்து மகிழ்ந்தேன். அப்போது கடவுள் என்னோடு கைகுலுக்கியதாய் உணர்ந்தேன்'' என்று சொல்லும் இவர், சமீபத்தில் 'யூனிசெப்'புடன் இணைந்து தனது மித்ரா ஃபவுண்டேஷன் மூலம் எச்.ஐ.வி. பாதித்த குழந்தைகளுக்கான பல் சிகிச்சை முகாமை சமீபத்தில் நூறு டாக்டர்களுக்கு நடத்தினார்.

அட! கடவுளின் ஃப்ரெண்ட்ஷிப்தான் முக்கியம்ங்க!

- ஆர்.பாலா

வதற்கு முன்பே தெரிந்து வைத்திருந்தவர். இன்னும் ஒரே ஒரு க்ளையண்ட்தான் பாக்கி. டாக்டர் மிருதுளா. சற்றுமுன் அவளைத் தேடிப் போய் அந்த அட்ரஸில் அவள் இல்லாமல் போக அதிர்ச்சியடைந்தான். மேற்கொண்டு மீண்டும் ஃபோன் செய்து கண்டுபிடிக்கலாம், ஆனால் அதற்கு நேரம் போதவில்லை. இன்று மதியம் புறப்படும் திருச்சி வரை செல்லும் ஸ்பெஷல் ரயிலில் முன்பதிவு செய்திருந்த காரணத்தால், அப்படியே யூ டர்ன் அடித்து அவசரமாக அறைக்குத் திரும்பினான்.

**பூ**த்துவாலையால் தலையை அவசரமாகத் துவட்டிக்கொண்டே வந்தவன், கடிகாரத்தைப் பார்த்தான். மணி பன்னிரண்டு. மூன்று மணிக்கு ரயில்.

குறைந்தது அரைமணிநேரம் கையில் இருப்பதை உணர்ந்தவன், தன் பேகைத் திறந்து அதிலிருந்து லேப்டாப்பை எடுத்து தொடர்பு ஒயரை முத்துனை மின் இணைப்பில் பொருத்தினான். பக்குவமாக அதனைப் பிளந்து திரையில் கணினி தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ளும் முஸ்தீபுகளை சில கணங்களுக்கு ரசித்தான்.

பின் ஜி மெயிலைத் திறந்து பழைய கடிதங்களில் நகர்ந்து டாக்டர் மிருதுளாவின் பெயர் மற்றும் இனிஷியலைப் பிரதி எடுத்துக்கொண்டு மீண்டும் அந்தப் பக்கத்தை இறக்கிவிட்டு, கூகுள் தேடலில் வந்து அங்கு அந்தப் பெயரை ஒட்டி, உடன் கல்கத்தா டாக்டர்ஸ் என்றும் எழுதி 'தேடு'வைச் சொடுக்கிய நொடியில், ஏகப்பட்ட மிருதுளாக்கள் அவன்முன் க்யூ கட்டி நின்றனர்.

அதற்குள்ளாக இடப்பக்கம் சாட் பாக்ஸில் 'ஹி' என மீனா அழைத்தாள். அவ்வளவுதான். அவளிடம் அரட்டை தொடங்கினால் இன்றைக்கு ரயிலைப் பிடிக்க முடியாது என முடிவு செய்து அவளுக்குப் பதில் தராமல் தொங்கலில் விட்டான்.

இவன் பட்டியலில் டாக்டர் மிருதுளாவைத் தேடிக்கொண்டிருந்த அதேநேரம், மீனா... 'சாட் பாக்ஸில் எவ கூட கத்தற?' என அடுத்த கேள்வியைக் கேட்க, இப்போது இவன், 'மிருதுளா' என்று மட்டும் பதில் போட்டுவிட்டுச் சிரித்துக் கொண்டான்.

ஒருவழியாக மிருதுளாவையும் அவளது புதிய முகவரியையும் கண்டு

பிடித்த கையோடு, தான் அவனுக்கு விளக்க விருந்த ஸ்டெம் செல் குறித்த ப்ரவுச்சர் களையும் பத்திரிக்கை செய்திகளையும் ஒரு கவரில் போட்டு, அதன் மேல் புதிய முகவரியை எழுதி பஸ்ஸரை அழுத்தி விட்டுக் காத்திருந்தான்.

அப்படியே படுக்கையில் சாய்ந்த வனுக்கு, சட்டென தேன்மொழியின் ஞாபகம் மனத்திரையினுள் வந்து போனது. இந்நேரம் சென்னைக்குத் திரும்பியிருப்பாள். அன்று காலை ரயில் பாதியில் நின்ற சமயத்தில் அவள் பாடிய பாடலும் முக பாவங்களும் ஞாபகத்துக்கு வந்தன. லேப் டாப்பில் சேகரித்து வைத் திருந்த பாடல்களில் அந்தப் பாடலைத் தேடிப் பிடித்து ஓடவிட்டான்.

'சிட்டுக் குருவி முத்தம் கொடுத்து' பாடல் முழுவதுமாக ஒலித்து முடிவதற் குள் வாசலில் வந்து நின்ற சிப்பந்தியிடம் கூரியர் அனுப்பச் சொல்லி பார்சலையும் ரூபாயையும் கொடுத்தான். புதிதாக எடுத்திருந்த பேண்ட்டையும் டீ-ஷர்ட்டை யும் அணிந்து தயாராகி ஷூவை மாட்டி பேகில் அனைத்தையும் பேக் செய்திருந் தான். பாடல் முடிந்தவுடன் அந்த மடிக் கணினியின் திரையை இருளாக்கி மடித்து, இணைப்பைத் துண்டித்து ஒயரைச் சுருட்டி கணினியுடன் பைக்குள் பத்திரமாக வைத்து ஜிப்பை மூடினான்.

அடுத்த பதினைந்தாவது நிமிடம் ஹோட்டலின் லாபியில் அவன் காத்தி ருக்க, மஞ்சள் நிற டாக்ஸி அவன் முன் வந்து நின்றது. கதவைத் திறந்து ஹவு ராவுக்கு எனக் கட்டளையிட்டுச் சாய்ந்து கொண்டான். வண்டி ஹோட்டலை விட்டு வெளியேறி சாலைக்குள் விரைந்தது. மணிக்கட்டைத் திருப்பினான். மணி இரண்டு பதினைந்து. இன்னும் 45 நிமி டங்கள் மட்டுமே இருக்கின்றன.

டிக்கெட்டில் இருக்கை எண்ணைச் சரிபார்க்க எண்ணி, பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்தான். இரண்டு பாக் கெட்டிலும் இரண்டு பர்ஸ்கள் இருந்தன. வலப்பக்க பர்ஸை எடுத்தான். அதில் டிக்கெட்டை எடுத்துச் சரிபார்த்துக் கொண்டவனுக்கு அதிர்ச்சி. வெறும் இரண்டு நூறு ரூபாயும் சில சில்லறை களும் மட்டுமே இருந்தன. உடன் சொரு கப்பட்டிருந்த பண அட்டைகள் அவனைப் பார்த்துச் சிரித்தன. நேற்றே ஏ.டி.எம். போக வேண்டியது, சோம்பேறித்தனத்தால் தள்ளிப்போனது ஞாபகத்துக்கு வந்தது. சட்டென இதயத் துடிப்பு அதிகரித்தது. டிரைவரிடம் ஏதாவது ஏ.டி.எம் அருகே

''போரில் மன்னரோடு சேர்ந்து அண்டை நாட்டரசனும் ஓடி வர்றானே ஏன்?''

'' 'நட்புக்காக'வாம்!''

- பி.ஜி.பி. இசக்கி



வண்டியை நிறுத்தச் சொன்னான். அவனோ ரயில் நிலையத்திலேயே பல தானியங்கி பணசேவை இயந்திரங்கள் இருப்பதாக இந்தியில் சொன்னான். அவன் சொல்வதும் சரிதான். கொஞ்சம் டென்ஷனாக இருந்தாலும் கூட்டிக்கழித்துப் பார்த்த போது பத்து நிமிடம் எஞ்சி நின்றது. அதற்குள் உலகத்துக்கே உறை தைக்கலாம் என தன்னைச் சமனப்படுத்திக் கொண்டான்.

மெல்ல மேகங்கள் சூழ்ந்து வானம் இருளத் தொடங்கியது.

ஹவுரா பாலத்தில் டாக்ஸி நுழைந்த போது அகன்ற அந்த சாலை முழுக்க, எங்கு பார்த்தாலும் மஞ்சள் டாக்ஸிகள். கறுப்புச் சாலையில் பறவைகளைப் போல பறந்து கொண்டிருந்தன. கடந்து செல்லும் பாலத்தின் இரும்புக் கம்பிகளுக்கு அப்பால் வளைந்து ஓடும் பிரம்மாண்டமான நதியைப் பார்த்தான். வானம் இருண்டிருந்ததால் அடர்ந்து இருண்டு கலவரமாகக் காணப்பட்டது. கரையில் பலர் அவசர அவசரமாகக் குளித்துக் கொண்டிருந்தனர். தொலைவில் இருபடகுகள் நிழல்களாய் விரைந்து கொண்டிருந்தன.



**காணாமல் போன தேன்மொழியின் பர்ஸ் இவனிடம் வந்தது தனிக்கதை**

ஹவுரா முன் டாக்ஸி நின்றதும், மின்னல் வேகத்தில் பர்ஸில் எஞ்சியிருந்த இரண்டு நூறு ரூபாய்த் தாள்களைத் திணித்துவிட்டு ஏ.டி.எம்.முக்காக ஓடினான்.

வழியில் ஒருவரிடம் கேட்டபோது, மெயின் பில்டிங்கைக் காட்டினார்.

அங்கே நீளமாக க்யூ நின்றுகொண்டிருந்தது. கடிகாரத்தைப் பார்த்தான். 2.50 இன்னும் பத்து நிமிடம் இருந்தது. க்யூ நகரவில்லை. காரணம் கேட்டபோது, வங்கியாளர்கள் பணத்தை நிரப்புவதாகவும் இன்னும் குறைந்தது ஐந்து நிமிடமாவது ஆகும் எனக் கூற 'வேறு எங்கு ஏ.டி.எம் இருக்கிறது?' என விசாரித்தான்.

2.52. இன்னும் எட்டு நிமிடம்.

சுலபமாகக் கண்டுபிடித்தான்.

அப்பாடா... நல்ல வேளை இந்த இடத்தில் கூட்டமே இல்லை. உள்ளே நுழைந்தான்.

தற்போது பெட்டியில் பணம் இல்லை என இளித்தது. பெட்டியைக் காலால் ஓங்கி உதைத்தான். வெளியில் வந்தான். வெறுப்பாக இருந்தது. பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்தான். அங்கு இன்னொரு பர்ஸ் இருந்தது. எதை இனி பிரிக்கவே கூடாது என மூடிவைத்திருந்தானோ அந்த பர்ஸ்.

எடுத்துப் பிரித்தான்.

உள்ளே தேன்மொழி புகைப்படத்தில் சிரித்தாள். மற்றும் சில ஆயிரம் நோட்டுக்களும், பண விடை அட்டைகளும் இருந்தன.

குற்றவுணர்ச்சி அதிகரிக்க, சட்டென ஜிப்பை மூடி பாக்கெட்டில் வைத்தான்.

உடன் தேன்மொழியின் அப்பாவி முகம் ஞாபகத்துக்கு வந்தது.

ஆனால் எக்காரணம் கொண்டும் அதனை மறுபடியும் திறக்கக் கூடாது என உறுதியாக முடிவு செய்தான். சென்னை வரை இனி பட்டினிதான் என முடிவு செய்து கொண்டவன், ரயிலைப் பிடிக்க அசுர வேகத்தில் ஓடினான்.

காணாமல் போன தேன்மொழியின் பர்ஸ் இவனிடம் வந்தது தனிக்கதை.

**(மீன்கள் துள்ளும்)**

# நாங்களும் ஃப்ரெண்ட்ஸ்தான்!



இந்தப் புலி பசித்தாலும் பன்றியைத் தின்னாது. பாசக்காரப் பயலின் பெயர்: சைமாய்; இடம்: பேங்காக்



ஏண்டா, ஆந்தைகிட்ட நட்பா இருக்கிறது ஒரு அதிசயமா? அதை ஃபோட்டோ எடுக்கறீங்க!



டைரக்டர் இராம. நாராயணன்கிட்ட சொல்லுங்கப்பா. இது நடிப்பில்ல - நட்பு.
- அஞ்சனா (மனிதக் குரங்கு)

நன்றி:www.wiredworm.com



குளிர்ச்சியா பழகற உன்னைப் போய் நெருப்புக் கோழின்னு சொல்றாங்களே! இடம்: ஃப்ளோரிடா (USA)

- பரத்ராம்

**எ**ட்டு இளைஞர்கள் தங்கியிருக்கும், ஒரு மேன்ஷன் எப்படியிருக்கும்? இதற்குள் ஏன் எட்டிப் பார்த்தோம் என்றுதானே இருக்கும்! தாம்பரம், கேம்ப் ரோடு, சேலையூர் வள்ளலார் தெருவில் உள்ள அந்த மேன்ஷன், உங்களை வியப்பில் ஆழ்த்திவிடும். தினசரி மற்றும் வார இதழ்கள் வந்து குவிகின்றன அறைக்குள். அறை சுவர்கள், சுவர்களாகவே இருக்கின்றன. கவர்ச்சிப் படங்கள் ஏதும் இல்லை. மாறாக, அகன்ற திரையில் உலக வரை படம்! பார்க்க ஒரு வண்ணத் தொலைக் காட்சிப் பெட்டி. இணைய தள வசதியுடனான கணிப்பொறி.

இவ்வளவுதான் அவர்களின் மேன்ஷன் உலகம் என்றில்லை. கேம்ப் ரோடு நண்பர்கள் குழு CRFG (Camp Road Friends Group) என்கிற அமைப்பினை உருவாக்கி, கடந்த நான்காண்டுகளாக அதனை ஒரு இயக்கமாகவே மாற்றியமைத்துச் செயல்பட்டு வருகின்றனர்.

''**செ**ன்னைக்கு வேலைக்குப் போறேன்னு வீட்ல சொன்னதும், அம்மா அப்பா சொன்ன வார்த்தை 'பசங்களோட சேர்ந்து கெட்டுப் போயிடாதே செந்தில்!' ஆனா நா இங்கே வந்து தங்கினதுக்கப்புறம் எங்களோட இந்த CRFGயோட நடைமுறைகளை என்னோட அப்பாகிட்டே விவரமா சொல்வேன். இந்த வாய்ப்பு இள வயசுல தனக்குக் கெடைக்கலையேனு வருத்தப்படுவார் என் அப்பா!'' எனச் சொல்கிறார் கள்ளக்குறிச்சியிலிருந்து வந்து தங்கியிருக்கும் செந்தில் குமார்.

**எ**ட்டு இளைஞர்களுடன் தொடங்கிய CRFGயில் தற்போது இருபத்தைந்து இளைஞர்கள். அதன் ஆரோக்கியமான செயல்பாடுகளைக் கேள்விப்பட்டு, வேறு வேறு மேன்ஷன்களில் தங்கியுள்ள இளைஞர்களும் வந்து சேர்ந்துள்ளனர். அனைவரும் பட்டதாரிகள். வெவ்வேறு நிறுவனங்களில், வேலை பார்ப்பவர்கள். கடந்த நான்காண்டுகளாக 'நட்பு' என்கிற மூன்றெழுத்து மந்திரமே, தங்களை ஒன்றிணைத்து வைத்துள்ளது எனச் சொல்கின்றனர் அனைவரும்.

# மெருகு மேன்ஷன்






மேன்ஷனில் தங்கியிருக்கும் எட்டு இளைஞர்களின் பிறந்த நாட்களும், ஒவ்வொரு வருடமும் கொண்டாடப்படுகின்றன. ''மீதி ஏழு பேர் சேர்ந்து ட்ரெஸ் எடுத்து பர்த்டே பேபிக்குக் கொடுத்திடுவோம். அன்றிரவு பிறந்த நாள் கேக் வெட்டிக் கொண்டாடுவோம். மாசா மாசம் பிறந்த நாள் வராதானு ஏக்கமா போயிடும் எங்களுக்கு!'' என்கிறார் திருநெல்வேலி ஜெகநாத சிவகுமார்.

''இந்த எட்டு பேர்ல, யாராச்சும் வேறு ஊருக்குப் போனாலும் அந்த நண்பர், எங்க CRFGவிலேருந்து விலகிட மாட்டாரு. பதவி உயர்வு பெற்று, வருவாய் அதிகம் நோக்கி, வேற கம்பெனிக்குப் போகும் போது அதுக்கும் நாங்க ஒரு விழா எடுக்கிறோம்; கோயில் சந்நிதியிலே! இங்கேருந்து ராம்குமார் பெங்களூரு போனான். திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் சுவாமி சந்நிதியில சுவாமி பாதத்துல அவனோட ஆஃபர் லெட்டரை வெச்சு கும்பிட்டுத்தான் அவனை பெங்களூரு அனுப்பி வைச்சோம்!'' எனச் சொல்கிறார் வயலூர் கண்ணன்.

''பொறந்த நாள், சம்பள உயர்வு எல்லாத்துக்கும் விழா கொண்டாடுறோம். இது கொஞ்சம் சுயநலமா தோணிச்சு எங்களுக்கு. உடனே, மாத்தி யோசிச்சோம். இங்க இருபத்தைஞ்சு பேரும் சென்னை, பெங்களூரு, கிருஷ்ணகிரினு இருக்கோம். அவங்க எல்லாரும் ஒண்ணுகூடி, பயனுள்ள பொழுதா கழிக்கற ஒரு நாளை உருவாக்கினோம். See You Day எனப் பெயர் வைத்தோம். எங்களோட மொதல் ஸீ யு டேயை, பழைய பெருங்களத்தூரில் உள்ள சாரதா சக்தி பீடம் அனாதைகள் இல்லத்துல நிகழ்த்தினோம். அந்த

"இறைவன்கூட விடுமுறை தினத்தில் எங்களின் அழையா விருந்தாளி!"

# யூத்ஸ்!



இல்லத்துல இருந்த நூற்றுக்கும் மேற்பட்டவர்களுக்கு, அன்னைக்கு எங்க செலவுல காலைச் சிற்றுண்டி மற்றும் மதிய உண வளித்து, அவர்களுடன் ஒரு நாள் பொழுது முழுவதும் தங்கியிருந்தோம்.''

அந்த இருபத்தைந்து இளைஞர்களில் எந்த வீட்டில் நல்லது கெட்டது நிகழ்ந்தாலும், CRFGயின் பெரும்பான்மை உறுப்பினர்கள் ஆஜராகி விடுகின்றனர். அப்படித்தான் ஆயிற்று, பெரம்பலூர் மாவட்டம் செஞ்சேரி ஜெகதீசன் தங்கை திருமணம் மற்றும் கிருஷ்ணகிரி சரவணன் திருமணம். இரண்டு திருமணமும் வேறு வேறு ஊர்களில். ஆனால், ஒரே நாளில்.

''முதல் நாள் மாலை, பெரம்பலூரில் ஜெகதீசன் தங்கை பெண் அழைப்பு. அதுல எங்க CRFGயிலேருந்து பதினெட்டு பேர், அந்தப் பெண்ணோட அண்ணன்களா நின்னு பெண் அழைச்சு விட்டோம். மறுநாள் காலைல கிருஷ்ணகிரி சரவணன் கல்யாணத்துல ஆஜர்!'' என்கிறார் பெங்களூருவில் இருக்கும் நெடுங்கூர் அன்பரசன்.

''எங்க நட்பு குழுமத்துல இதுவரைக்கும் நாலு பேருக்குக் கல்யாணம் ஆகியிருக்கு. வெங்கடேஷ் - ராதாதான் எங்க வட்டத்துல முதல் தம்பதி. எங்க இருபத்தைஞ்சு பேர் உறவுச் சங்கிலியில முதன் முதலா ஒரு பெண்ணா வந்து இணைஞ்ச இனிய வரவுதான் ராதா. இன்னும் ரெண்டு வாரத்துல ராதாவுக்குப் பிரசவம். எங்க நட்புக் குழுமத்தில் இது முதல் வாரிசு!'' என ஆவல் பொங்கக் கூறுகிறார் திருவனந்தபுரத்திலிருந்து வந்திருக்கும் பென்னி மேத்யூ ஜார்ஜ்.

''சரி, இதுக்கெல்லாம் மையப் புள்ளியா, அச்சாணியா, இயக்கு சக்தியா இருக்கறது, எங்க சரோ என்கிற ஸ்ரீரங்கம் சரவணன்.

'ஒரு பட்டாம்பூச்சியின்/சிறகடிப்பைப் போல/ அத்தனை அழகானது/ எங்களது விடுமுறை தினங்கள்/ திரைப்படம்/ தேநீர் விருந்து/ கேலிப் பேச்சு எள்ளல் துள்ளல்/ உவகை என/ எதற்கும் பஞ்சமிருக்காது/ அந்த ஒரு நாள்/ ஒரு பொழுது ஒரு நிமிடம்/ எங்களோடு கூடிக்/ களித்திருந்தால்/ இளைஞர்கள் மட்டுமல்ல/ இறைவனும்கூட/ அடுத்த விடுமுறை தினத்தில்/ எங்களின் அழையா விருந்தாளி!' எனக் கவிதை எழுதியவன் எங்க அன்பரசன்!'' என்கிறார் மேலப்புலியூர் ராம்குமார்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**




**நண்பர்கள் பேசிக்கொண்டார்கள்...**

'நல்லது! படகைப் பற்றி உனக்கு எவ்வளவு தெரிகிறது பார்க்கலாம். நீ படகில் ஏறி கடலில் பயணம் செய்கிறபோது திடீரென ஒரு புயல் வந்தால் என்ன செய்வாய்?'

'ஒரு நங்கூரத்தைக் கடலில் எறிவேன்.'

'இன்னொரு புயல் மறுபக்கம் வந்தால்?'

'இன்னொரு நங்கூரத்தைக் கடலில் எறிவேன்.'

'இன்னொரு புயல் எதிர்பாராமல் முன்பக்கம் வந்தால், அப்போது என்ன செய்வாய்?'

'மற்றொரு நங்கூரத்தைக் கடலில் எறிவேன்.'

'நிறுத்து! இத்தனை நங்கூரம் உனக்கு எங்கிருந்து கிடைக்கும்?'

'இத்தனை புயல்கள் உனக்கு எங்கிருந்து கிடைத்ததோ, அதே இடத்தில் இருந்துதான்!'

**- ஜி.லக்ஷ்மிபதி**

# கல்கி & பிரக்ஞா

பெண்கள் மீதான வன்முறையை எதிர்த்து 16 நாட்கள் பிரச்சாரம்

இணைந்து நடத்தும்...

## மாறுவோம்; மாற்றுவோம்!

-பெண்களுக்கெதிரான வன்முறை குறித்து

சேர்ந்து சிந்திக்க சந்தர்ப்பம்

தமிழச்சி தங்கபாண்டியன்
திலகபாமா
வழக்கறிஞர் சுமதி
நடராஜ் ஐ.பி.எஸ்.
இயக்குநர் வஸந்த்
டாக்டர். ருத்ரன்
பாஸ்கர் சக்தி
கே. பாரதி
ரீஸ்வானா பானு
பாரதி சந்திரமௌலி

ஏன்..?
எங்கு..?
எப்படித் தீர்க்க..?
எங்கே ஆரம்பிக்க...?

**இவர்களுடன் நீங்களும்...**

**ஞாயிறு, டிசம்பர் 6** நேரம் : மாலை 4 மணி

இடம்: யூத் ஹாஸ்டல் வளாகம்

இந்திரா நகர், சென்னை-600020 (இந்திரா நகர் வாட்டர்டேங்க் அருகே)

**அவசியம் வாங்க... அன்புடன் அழைக்கிறோம்!**

Leonid Afremov

# ஆக்கலும் அழித்தலும்

மெக்ஸிகோ. ஜூன், 1955. மிகவும் குளிரான ஒரு தினம் அது. இருவரும் ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்வது அதுதான் முதல் முறை. காஸ்ட்ரோவின் சகோதரரும் தற்போதைய க்யூபா அதிபருமான, ரால் காஸ்ட்ரோ இருவரையும் அறிமுகம் செய்துவைத்திருந்தார்.

ஃபிடல் காஸ்ட்ரோ, முந்தைய மாதம்தான் சிறையில் இருந்து வெளிவந்திருந்தார். க்யூபாவை ஆண்டுகொண்டிருந்த கொடுங்கோல் ஆட்சியாளர் பாடிஸ்டாவின் ஆட்சியை அகற்றுவதற்காக நண்பர்களுடன் இணைந்து அரசு ராணுவ முகாம் ஒன்றின் மீது தாக்குதல் மேற்கொண்டார். முயற்சி தோல்வியடைந்தது. காஸ்ட்ரோ சிறையில் அடைக்கப்பட்டார். கிட்டத்தட்ட இரு ஆண்டுகள் சிறையில் இருந்தபிறகு, விடுதலை கிடைத்தது. ரகசியமாக மெக்ஸிகோவுக்குத் தப்பி வந்துவிட்டார்; மீண்டும் ஒரு திட்டம் தீட்ட.

க்யூபாவில் இராணுவம் மீது தாக்குதல் நடந்தபோது, லத்தீன் அமெரிக்காவில் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்தார் சே குவேரா. பயணங்கள் மீது அவருக்குத் தீராத காதல்! லத்தீன் அமெரிக்காவில் தொடங்கிய அவர் பயணம், மெக்ஸிகோவுக்கும் அழைத்து வந்திருந்தது.

காஸ்ட்ரோ தம் வழக்கறிஞர் தொழிலை சம்பாத்தியத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அதேபோல், சே தம் மருத்துவத் தொழிலை நோயுற்ற ஏழை எளியவர்களுக்கு உதவவே பயன்படுத்திக் கொண்டார்.



✱ நட்பு - 'ஆக்கல்'

அறிமுகம் முடிந்தது. வெளியே பனி பொழிந்துகொண்டிருந்தது. பனி குறித்தும் மழை குறித்தும் பேச ஆரம்பித்தார்கள். பிறகு, தமது பயணங்கள் குறித்து சே விவரித்தார். காஸ்ட்ரோ தம் போராட்ட வாழ்க்கையை விவரித்தார்.

சே குவேராவுக்குக் காஸ்ட்ரோவை உடனே பிடித்துப்போனதற்குக் காரணம், காஸ்ட்ரோ கனவு காண்பவராக இருந்தார் என்பதுதான். மேலதிகமாக, காஸ்ட்ரோவிடம் தெளிவான திட்டம் இருந்தது. திட்டத்தைச் செயல்படுத்தும் ஆற்றலும் உத்வேகமும் இருந்தன. நீண்டநேரம் இருவரும் பேசிக்கொண்டிருந்தனர். பொழுது விடியும்போது, சே ஒரு முடிவுக்கு வந்து





விட்டார். 'இனி என் பயணம் ஃபிடலுடன் தான்!' அதற்குப் பிறகு நடந்தது வரலாறு. அர்ஜெண்டினாவில் பிறந்த சே குவேரா, க்யூபாவை விடுவிக்க, காஸ்ட்ரோவுடன் கைகோத்துக் கொண்டார். வாழ்வின் இறுதி வரை நீடித்த உறவு அது.

**த**ம்முடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பை ஒரு சிலருக்கே அளித்திருந்தார் அடால்ஃப் ஹிட்லர். எதற்கு நெருங்க வேண்டும்? எதற்குப் பழக வேண்டும்? கீழ்ப்படிந்தால் போதாதா? என்றாலும், ஜோசப் கெப்பல்ஸுக்கு (கோயபல்ஸ் என்பது சரியான உச்சரிப்பு அல்ல) மாத்திரம் சற்றே கூடுதல் சலுகைகள் அளிக்கப்பட்டன. இருபத்தேழு வயதான கெப்பல்ஸ் நாஜி கட்சியில் சேர்ந்தபோது, ஹிட்லர் சிறையில் இருந்தார். அரசாங்கத்தைத் தூக்கியெறிவதற்காக நவம்பர் 1923ல் மேற்கொண்ட முயற்சி தோல்வியடைய, ஹிட்லர் சிறைப் பிடிக்கப்பட்டார். சிறையில் இருந்தபடி ஹிட்லர் மெயின் காம்ஃப் எழுத, கெப்பல்ஸ் கட்சியில் தம்மைக் கரைத்துக்கொள்ள ஆரம்பித்திருந்தார்.

நாஜி கட்சியை நேசித்தாலும் கெப்பல்ஸுக்கு ஹிட்லரைப் பிடிக்கவில்லை. ஆனால், ஹிட்லர் கெப்பல்ஸின் திறமைகளை அடையாளம் கண்டுகொண்டார். விடுதலையானதும், கார் ஒன்றை அனுப்பி கெப்பல்ஸை வரவழைத்துப் பேசினார்.



✱ நட்பு - 'அழித்தல்'

1926ம் ஆண்டு. முதல் சந்திப்பு. கைகுலுக்கிக்கொண்டார்கள். 'உங்கள் சித்தாந்தம் தவறு' என்று கெப்பல்ஸ் ஆரம்பித்தாலும், ஹிட்லருடனான தமது முதல் சந்திப்பை இவ்வாறு பதிவு செய்தார். 'நான் ஹிட்லரை நேசிக்கிறேன். ஹிட்லர் போல் பனிச்சென்று சிந்திக்கும் ஒருவர்தான் எனக்குத் தலைவராக வேண்டும் என்று விரும்புகிறேன்.'

கெப்பல்ஸின் தொடர் பிரசாரங்கள் ஹிட்லரை ஒரு மாபெரும் தலைவராக இனம் காட்டின. ஜெர்மனி போரில் தோற்றபோது, பல நாஜித் தலைவர்கள் ஹிட்லரை விட்டு வெளியேறினார்கள். கெப்பல்ஸ் அகல மறுத்தார். ஹிட்லர் தற்கொலை செய்துகொண்டபோது, கெப்பல்ஸ் தம் மனைவியையும், ஆறு இளம் குழந்தைகளையும் கொன்று, தம்மையும் மாய்த்துக்கொண்டார்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:**

'**உ**டுக்கை இழந்தவன் கை போல' ஓடோடிச் சென்று உதவும் உங்களுக்கு இது மணமகிழ் காலம். பணத்தையும் நண்பர்களிடம் வார்த்தையையும் கவனமாகச் செலவழிக்கவும். இல்லத்தரசியின் இதயத்தில் நட்பை ஊற்றுங்கள். அது இல்லறத்தை ஊன்றுகோலாகத் தாங்கும். ஏணி போல சில நட்புகள் வந்து உங்களை உயரத்தில் ஏற்றி வைக்கும்.

**நட்பு ராசி:** கடகம், தனுசு, மீனம்.

**ரிஷபம்:**

**ந**ட்பைக்கூட கற்பைப் போல பாவிக்கும் நீங்கள் செண்டிமெண்ட் ஆசாமி. கூட்டுச் சேர்ந்து தொழில் தொடங்கினால் ஏட்டுச் சுரைக் காய்கூடப் பொன்னாகும். சிறு சச்சரவுகள் நட்புகளிடையே வந்தாலும், அதையெல்லாம் மூழ்கடிக்க சந்தோஷச் செய்திகள் படையெடுக்கும். வாகனத்தில் செல்கையில் கவனம் வேண்டும்.

**நட்பு ராசி:** மிதுனம், தனுசு, மகரம்.

**மிதுனம்:**

**உ**ண்மை நட்பென்றால் உயிரையும் கொடுக்கும் உங்களுக்குக் கை கொடுக்கக் காத்திருக்கிறது, நீங்கள் காலத்தினால் செய்த உதவி. நண்பர்கள் மூலம் உங்கள் வீட்டில் திருமணம் கைகூடி வரும். நகையும் நட்பும், மேன்மேலும் உங்களை நோக்கி வரும்.

**நட்பு ராசிகள்:** ரிஷபம், சிம்மம், துலாம்



நட்புக்கு பாதுகை

**கடகம்:**

நண்பர்களையும் உறவினராக பாவிக்கும் நீங்கள் மிகுந்த அதிர்ஷ்டசாலி. உங்களுக்குப் பகை ராசி மிக மிகக் குறைவு. புகழுக்கு மயங்காமல் பணத்தில் கவனம் வையுங்கள். நண்பர் உறவினராகும் வாய்ப்பு மிக அதிகம்.

**நட்பு ராசிகள்:** மிதுனம், சிம்மம்.

**சிம்மம்:**

பெரிய நட்பு வட்டம் எப்போதும் உங்களைச் சுற்றியே இருக்கும். பழைய நண்பரையும் புதிய பதவி உயர்வையும் சந்திக்கும் யோகம் இருக்கு. கூட்டாகத் தொழில் செய்வதை விட்டு விடவும்.

**நட்பு ராசிகள்:** கடகம், விருச்சிகம், தனுசு, மீனம்.

**கன்னி:**

கண்டதும் காதல் மாதிரி, பேசியதும் நட்பாகிவிடும் நீங்கள், கடகம், விருச்சிகம் ராசிக்காரர்களோடு பழகுவதைத் தவிர்த்திடுங்கள். நீண்டநாள் தொல்லைகள் நீங்கி மனத்தில் 'நல்ல நட்பு' போல அமைதி தங்கும்.

**நட்பு ராசிகள்:** ரிஷபம், சிம்மம், துலாம்

**துலாம்:**

எந்தச் சிக்கலையும் நட்பால் வென்றுவிடும் நீங்கள், மிகுந்த கவனத்தோடு இருக்க வேண்டும். யாருக்கும் ஜாமீன் கையெழுத்துப் போடாதீங்க. அது தீய நட்புபோல உங்கள் சட்டையில் 'தீ' பற்ற வைக்கும்.

**நட்பு ராசிகள்:** மிதுனம், தனுசு, மகரம், கும்பம்

**விருச்சிகம்:**

தைரியமான நண்பர்கள் கிடைக்கப் பெற்றிருக்கும் நீங்கள் தைரியமான சில முடிவுகளையும் எடுப்பீர்கள். வீடு வாங்கும் யோசனையையும், சுயநல நண்பர்களையும் கொஞ்ச நாளைக்குத் தள்ளியே வையுங்கள்.

**நட்பு ராசிகள்:** சிம்மம், தனுசு, மீனம்

**தனுசு:**

நல்ல நண்பர்களால் நற்பலன்கள் கூடி வரும். எதிரிகூட நண்பனாகும் யோகம் இருக்கு. வாக்குறுதி கொடுக்காதீர்கள். அது உங்களை அலைக்கழிக்கும். பண வரவு இருக்கும்.

**நட்பு ராசிகள்:** மேஷம், சிம்மம், கன்னி, விருச்சிகம்

**மகரம்:**

சிநேக மனப்பான்மை கொண்ட உங்களுக்கு துரோகம் செய்ய சிலர் காத்திருக்கலாம். கல்யாணம் கூடி வரலாம். நண்பர்களிடம் எச்சரிக்கை தேவை. நீண்ட நாள் கடனும், பழைய நட்பும் உங்களைத் தேடி வரும்.

**நட்பு ராசிகள்:** ரிஷபம், மிதுனம்

**கும்பம்:**

நட்பால் அதிகமாக நொந்து போயிருக்கும் நீங்கள் யாருக்கும் ஜாமீன் போடாதீர்கள். சுயநலப் பேர்வழிகளால் சொத்து நாசமாகலாம். விழிப்போடு இருந்தால் பழி வந்த வழியே போகும்.

**நட்பு ராசிகள்:** ரிஷபம், மிதுனம்

**மீனம்:**

நட்புக்கு உயர்ந்த இடம் அளிக்கும் நீங்கள், கூட்டுச் சேர்ந்து தொழில் செய்ய நல்ல நேரம். இறைவன் மேல் பாரத்தைப் போட்டு கடமையில் கண்ணாய் இருங்கள். தேங்கிக் கிடந்த காரியங்கள் நட்பால் கைகூடும்.

**நட்பு ராசிகள்:** மேஷம், சிம்மம் □



# வாழ்த்தொன்று போதும்!

**பொ**ங்கல் அன்று காலையிலிருந்தே பெரியவர் கனகசபாபதிக்கு இருப்புக் கொள்ளவில்லை.

உள்ளுக்கும் வாசலுக்கும் நடப்பதும் அடிக்கொருதரம் தெருவை எட்டிப் பார்ப்பதுமாக இருந்தார்.

பேரக் குழந்தைகள் மாவிலைக் குழைகளுடன் ஓடி வந்தார்கள்.

''தாத்தா! தோரணம் கட்டிக் குடுங்க!''



மாவிலைகளைக் கழுவினார். சணலை எடுத்தார். காம்பை மடித்து, சணலைக் கோத்து - எல்லாம் இயந்திர கதியில் நடந்தன.

சைக்கிள் மணிச்சத்தம் கேட்டால் தோரணத்தை அப்படியே போட்டுவிட்டுத் தட்டுத் தடுமாறி எழுந்து போனார்.

''எத்தனை மணிக்கு பொங்கல் வைக்கறதுன்னு பேப்பர்ல போட்ருக்கு?''

கேட்டுக் கொண்டு வந்து நின்றாள் மருமகள்.

முகத்தில் பளீரென்று மஞ்சள். முன்நெற்றியில் கொத்தாக நரை.

அதற்குள் நரைத்துவிட்டதா இந்தப் பெண்ணுக்கு?

''பத்திலிருந்து பத்தரைக்குள்'' என்று சொல்லிவிட்டு வாசலுக்குப் போனார் பெரியவர்.

வாசலில் அவர் பையன். ஐம்பது வயதை நெருங்கும் பையன்.

தலையில் பேர் பாதிக்கு மேல் வழுக்கை. தொப்பை. முதுகெல்லாம் முடி. கனகசபாபதிக்குத் தம் அப்பா ஞாபகம் வந்தது. அவருக்கும் முதுகெல்லாம் முடி இருக்கும்.

''என்னப்பா, என்ன வேணும்?'' - பையன் கேட்டார். குரலிலும் நெருஞ்சி குத்துமா?

''ஒண்ணுமில்லே. போஸ்ட்மேன் வந்தாச்சா?''

''ஓ! உங்க நண்பர்ட்டேருந்து பொங்கல் வாழ்த்து வரும்னுதான் காலையிலேர்ந்து இப்படி அல்லாடறீங்களா?''

கேலி புரிகிறது.

''வரும்டா... நிச்சயம் வரும்!'' - பெரியவர் பல்லைக்

கடித்துக்கொண்டு சொன்னார் - மனசுக்குள்.

வாசலிலேயே பழியாக உட்கார்ந்துவிட்டார்.

வாழ்த்து வரும்.

வந்துவிடும்.

ஒரு வர்ணப்படம்.

எருதுகளும் ஏர் உழவனும்! இல்லாவிட்டால் சமுத்திரத்திலிருந்து தகதகவென்று எழுகிற கதிரவன்!

என்ன? உன்னை நினைக்க நான் இன்னும் இருக்கிறேன்!' என்று சொல்லும் வாழ்த்து.

இன்று நேற்றல்ல! கடந்த 25 வருடங்களாக வந்து கொண்டிருக்கிறது.

மனைவி இருந்தவரை - அவளுக்குத் தெரியும் அதன் மகிமை!

வழக்கம்போல் பொங்கல் அன்று அவள்தான் கொண்டு வந்து கொடுப்பாள்!

'உங்க நண்பர் வாழ்த்து அனுப்பி இருக்கார்!' என்பாள் முகம் மலர.

**॥ தஞ்சாவூர்க்கவிராயர் ॥**



கீழே 'என்றும் உன்னை மறவா நண்பன் இராமநாதன்' என்று ஒரு வரி கிறுக்கல் கையெழுத்தில். கையெழுத்தை வைத்தே வயதைச் சொல்லி விடலாம் போல நடுங்கும் அட்சரங்கள்.

'எவ்வளவு வயதானால்

அலுவலக நண்பர்கள், உறவினர்கள் என்று எத்தனையோ பேர் வாழ்த்து அனுப்பி இருப்பார்கள்.

அவற்றில் இராமநாதனின் வாழ்த்தை மட்டும் எடுத்து பத்திரப்படுத்துவார் கனகசபாபதி.

**த**ஞ்சாவூரில் சிவகங்கை பூங்கா அருகே இருந்த ஆசிரியர் பயிற்சி விடுதியில் இருவரும் ஒன்றாய்த்

தங்கிப் படித்த நினைவுகள் நிழலாடும்.

காலம்தான் எப்படிப் பறந்தோடி விட்டது! இனிப்பும், கசப்பும், கரிப்பும், துவர்ப்புமாய் எத்தனை நினைவுகள்!

இப்போதோ -

வாழ்க்கை என்பது யாருக்கோ நடப்பதை வேடிக்கை பார்க்கிற மாதிரி இருக்கிறது. இந்த வாழ்க்கையில் பங்கெடுக்கவே முடியாது போல் தோன்றுகிறது.

வேடிக்கை பார்ப்பதுதான் உத்தமம்.

தப்பித் தவறிப் பங்குகொள்ள முயன்றாலோ -

"உங்களுக்கு ஏம்ப்பா இதெல்லாம்? ஏன் தலையிடுறீங்க எங்க விஷயத்துல?"

பையனின் கழுத்து நரம்பு



புடைக்கும். முகத்தில் நெருஞ்சி முளைக்கும். சட்டென்று அடங்கிப் போவார்.

மனைவி பூரணி இல்லாமல் இது எத்தனாவது பொங்கல்?

கணக்கு மறந்துவிட்டது.

'பெரிய வீடு. சிறிய மனிதர்கள்!' - சிரித்துக் கொள்வார் கனகசபாபதி.

**க**ல்யாண புதுசில் தஞ்சாவூர் மேலவீதி பாலோபா சந்தில் ஒண்டுக் குடித்தனம். நினைத்தாலே நெஞ்சில் மணம் பரப்பும் சுகமான வசந்த காலம் அது!

பூரணி எத்தனை அதிசயமான பெண். குரல் உயர்த்திப் பேசியதே இல்லை.

செல்லக் கோபத்துடன், 'சத்தம் போட்டுப் பேசவே தெரியாதா?' என்றால் சத்தமில்லாத சிரிப்பு சிரித்துவிட்டுப் போய் விடுவாள்!

இப்போதோ மகனும் மருமகளும் சண்டை போட்டுக் கொள்வதைப் பார்த்தால் பயமாக இருக்கிறது. குழந்தைகள் டி.வி.யே கதியாகக் கிடக்கிறார்கள்!

ஒருநாள் புரையேறிவிட்டது - சாப்பிடும் போது. நிறையபடி சைகை காண்பித்தார். யாரும் இவரைக் கவனிக்கவில்லை. இவரே எழுந்துபோய் தண்ணீர் குடித்தார்.

நன்றாக ஞாபகம் இருக்கிறது. ஹாஸ்டலில் கனகசபாபதிக்கு அடிக்கடி காய்ச்சல்

---

"இண்டர்வியூல உன் பெயரைக் கேட்டா எதற்கு பத்து பெயரை எழுதித் தர்றே?"

"ரூமுக்குள்ள வரும்போது 'உன் நண்பர்கள் யாரெனக் காட்டு. உன்னைப் பற்றி நான் கூறுகிறேன்'னு எழுதி இருந்தது ஸார்!"

**- சி.பி.செந்தில்குமார்**

---

கண்டுவிடும். வகுப்புக்குப் போகாமல் கூடவே இருந்து கஞ்சி வைத்துக் கொடுப்பதும், டாக்டரிடம் அழைத்துப் போவதும்... உள்ளாடைகளைக்கூடத் துவைத்துப் போட்டிருக்கிறார் இராமநாதன்.

இதுபோன்ற சமயங்களில் கனகசபாபதிக்கும் சேர்த்து பயிற்சிக் குறிப்புகளை இராமநாதனே எழுதி எழுதி விரல் எல்லாம் வீங்கி விடும். 'என்னால் உனக்கு எவ்வளவு கஷ்டம்?' என்பார் கனகசபாபதி.

'நானும் ஒரு தடவை படிச்சாப்பல ஆச்சே' என்பார் இராமநாதன் சிரித்தபடி. அந்த நட்பின் கரிசனம் இந்தக் குடும்பத்தில் - ஏன் இல்லை?

அன்றைக்கு ரயில்வே ஸ்டேஷன் பெஞ்ச் மீட்டிங்கில் இதுவே பேசு பொருளாயிற்று!

''ஓய்! இதுகள்லாம் நம்மைக் கவனிக்கணும்னா நாமே டீ.வி. சீரியலில் நடிச்சாதான் உண்டு ஓய்...'' என்றார் பார்த்தசாரதி பொடியை உறிஞ்சியபடி.

கனகசபாபதி பெருமூச்சுவிட்டார். இந்தச் சூழல் பழகிப் போய்விட்டது.

ஆனால், சமீப காலமாய் காற்றுவாக்கில் காதில் விழும் செய்திகள் -

நண்பர்கள் ஒவ்வொருவராக இவ்வுலகிலிருந்து விடைபெற்றுக் கொண்டிருக்கும் தகவல்கள்.

மனத்தை இனம் புரியாத பீதி கவ்வுகிறது.

மரண பயமா? இருக்கலாம்!

அவருக்கு இந்தச் சமயத்தில் தேவைப் படுவதெல்லாம் சாய்ந்து கொள்ள ஒரு தோள். அவ்வளவுதான்!

மரணத்தைக்கூட அவர் சந்திக்கத் தயார்!

இந்த நிராகரிப்புகளைவிட மரணம் உத்தமம்.

'சொந்தமென்று நம்பிக்கொண்டிருக்கிற முகங்களோடு அந்நியப்படுகிற சோகம்தான் முதுமையின் மிகப் பெரிய அவலம்!' என்று ஒருநாள் தன் நாட்குறிப்பில் எழுதினார்.

இராமநாதனும் இவரைப் போல்தானா என்று தெரியவில்லை. இருவருக்கும் இடையே கடிதப் போக்குவரத்து இல்லை.

வாழ்த்து மட்டும் வருடம் தவறாமல் வந்துகொண்டிருக்கிறது.

நான் இருக்கிறேன் என்று சொல்வது மாதிரி.

'உன்னை என்றும் மறவா நண்பன்' என்ற வரிகளைப் படிக்கிறபோது மனசு அப்படியே நெகிழ்ந்து போகிறது.

தன்னை நினைக்கவும், நேசிக்கவும் இந்த உலகில் எங்கோ ஒரு மூலையில் ஒரு ஜீவன் இருக்கிறது என்ற உணர்வே



நாங்களும் ஃப்ரெண்ட்ஸ்தான்!

தெம்பாக இருக்கிறது!

இப்போது அதுகூட இல்லாமல் போய் விடுமோ? இராமநாதனுக்கு ஏதாவது...?

கனக சபாபதி அந்த நினைவை உதறித் தள்ளுவது மாதிரி தலையை ஆட்டினார்!

சட்டென்று சைக்கிள் மணிச் சத்தம் கேட்டது. மனசுக்குள் மகிழ்ச்சி குபீரென்று பாய்ந்தது.

வழக்கமாக வருகிற தபால் சேவகர் இல்லை.

இளைஞன். வேலைக்குப் புதியவன் போலும்.

பேரக் குழந்தைகள் ஓடிப்போய் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''தம்பி! எனக்கு ஏதாவது இருக்கா?'' கனகசபாபதி பொறுமை இழந்து கேட்டே விட்டார்.

''என்ன பெரியவரே! உங்களுக்கா?''

பெயரைச் சொல்லி மறுபடி கேட்டார்.

''கனகசபாபதி, நல்லா பாருப்பா!''

அவன் உதட்டைப் பிதுக்கிவிட்டு சைக்கிளில் ஏறிப் போனான்.

பெரியவருக்குக் கண்களை இருட்டிக்

கொண்டு வந்தது. இராமநாதனிடமிருந்து வாழ்த்து இல்லையா?

ஒருவேளை நாளைக்கு வருமோ?

இல்லையே! பொங்கலன்று 'டாண்' என்று கிடைக்கிறமாதிரி அனுப்பி விடுவானே!

'நண்பனே! இராமநாதா! உனக்கு என்ன ஆச்சு?' - மனம் அரற்றியது.

'நீயும் போய்விட்டாயா?'

''உங்க அப்பா ஏன் ஒரு மாதிரி இருக்கார்?'' உள்ளே மருமகளின் விசாரிப்பு.

''அவர் ஃப்ரண்டுகிட்டே இருந்து வழக்கமா வர்ற வாழ்த்து வரலையாம்! டல்லாயிட்டார்!'' - மகனின் பதில்.

''எல்லாருமே உங்கப்பா மாதிரி இந்த வயசுலயும் கின்னுண்ணா இருப்பாங்க? அவரு போயிட்டாரோ என்னமோ?''

கனகசபாபதி அப்படியே சரிந்தார். நெஞ்சுக் குழியில் ஒரு பந்து சுருண்டது.

ஐயோ! இராமநாதா! இவன் சொல்வதுபோல்...

திடீரென்று வாசலில் சைக்கிள் மணிச்சத்தம்.

லேசாகக் கண் திறந்தார். தபால்கார இளைஞன்.

பிரமையா? கானல் தோற்றமா?

நழுவும் வேஷ்டி பற்றிக் கவலைப்படாமல் நகர்ந்தார். கண்களை இருட்டிக் கொண்டு வந்தது.

அவனை நெருங்கும் இடைவெளி இத்தனை தூரமா?

''உங்க பேரு என்ன சொன்னீங்க?'' அவன்தான் கேட்கிறான்.

''கனகசபாபதி. எம்.கனகசபாபதி'' வாய் குழறியது.

''புலவர் கனகசபாபதியா?''




பெரியவர் நெஞ்சுக்கூட்டில் குமிழி போல் ஏதோ உடைந்தது. குபுக்...குபுக்... சந்தோஷக் குமிழிகள்!

''ஆமாம்! ஆமாம்!'' - தலையாட்டினார்.

''அடுத்த தெரு போய்தான் பார்த்தேன்... இந்தாங்க உங்களுக்கு வந்த வாழ்த்து!''

அவன் கையிலிருந்து பிடுங்காத குறையாக வாங்கினார்.

பிரித்தார்.

நீலவானில் இரு பறவைகள்!

'உன்னை என்றும் மறவா நண்பன்- இராமநாதன்!' - வாழ்த்து அட்டையை நெஞ்சோடு அணைத்துக் கொண்டார்.

நண்பனே! நண்பனே! நீ இருக்கிறாயா? நீ இருக்கிறாயா?

என்னை நினைக்க நீ இருக்கிறாய் - அது போதும்.

வாசல்வரைகூடப் போக முடியவில்லை. அப்படியே வாழ்த்து அட்டையிலிருந்த இரு பறவைகளில் ஒன்று வீழ்ந்ததுபோல் கால் பரப்பி விழுந்து கிடந்தார்.

அவரைச் சுற்றி மகன், மருமகள், பேரக் குழந்தைகள்...

''ஐயோ என்னாச்சப்பா!'' - அலறல்கள். கூக்குரல்கள்.

''எனக்கு ஒண்ணுமில்லே...'' சொல்ல முயன்றார். வாய் கோணிக்கொண்டு போயிற்று.

நெஞ்சோடு, யாரும் பிடுங்கிக் கொள்வார்களோ என்கிற மாதிரி, ஒரு குழந்தை போல் வாழ்த்து அட்டையை அணைத்துக் கொண்டு -

ஆனந்தமாகச் செத்துக் கொண்டிருந்தார் கனகசபாபதி. ○

இயற்கை எப்படி என்றால், எது ஒன்று ரொம்ப உச்சமாயிருக்கிறதோ அது மாறினால்தான் படுமோசமாகிவிடும். நல்ல பழம் அழுகிவிட்டால் சஹிக்க முடியாமல் நாற்றமெடுக்கிறது. சுத்தமான நெய் கெட்டுப்போனால் வயிற்றைப் பிடுங்கிக் கொண்டு குமட்டுகிறது. கள்ளிச் சொட்டு மாதிரியான பால், துளி ஏதோ சேரக்கூடாத வஸ்து சேர்ந்து விட்டால் கட்டி கட்டியாய்த் திரிந்து எதற்குமே ப்ரயோஜனமில்லாமல் ஆகிறது. இப்படித்தான் அத்யந்த ஸ்நேகத்தில் கொஞ்சங் கொஞ்சம் எங்கேயாவது விரிசல் விட்டுவிட்டால் அதுதான் பரம விரோதமாகிவிடுகிறது. அதி ப்ரியம், அதிலே அடைகிற இன்பம் ஆகியவை கொஞ்சம் பங்கப்பட்டுப் போனாலும் பரம துவேஷம், ஒரே கோபம், துக்கம் என்றாகிவிடும். முதலில் இருந்ததற்குத் தலைகீழாகிவிடும்.

காரணம் என்னவென்றால் - அவ்வளவாக நெருங்கிய பழக்கமில்லாதவர்கள் நமக்குப் பிடிக்காததாக ஏதாவது செய்துவிட்டாலோ, சொல்லிவிட்டாலோ, 'நம் மனசு இவர்களுக்குப் புரிய வேண்டுமென்பதில்லை. அதனாலே அதற்கு எப்படி இதமாக நடந்துக்கணும் என்று தெரியாமல் இவர்கள் வேறு தினுஸாக நடந்து கொள்கிறார்கள். இதைப் பெரிய குற்றமாக எடுத்துக் கொள்வதற்கில்லை' என்று நம் மனசே கொஞ்சம் சமாதானம் பண்ணிக் கொண்டுவிடும். நமக்குப் பிடிக்காததைப் பழக்கமில்லாதவர் பண்ணினாலும் குற்றமாகத்தான் தெரியும்; கோபம்தான் வரும். ஆனாலும் பெரிய குற்றமாகத் தெரியாது; ஸஹிக்க முடியாத கோபம் வராது. நமக்கு ரொம்பவும் பழக்கமானவர் பிடிக்காததைப் பண்ணும் போதுதான், 'நம் மனஸ் நன்றாகத் தெரிந்தும் அதை க்லேசப்படுத்தும்படியாக இப்படிப் பண்ணுகிறார்களே! இவர்கள் நம் எண்ணத்தை மதிக்காமல் இந்த மாதிரி செய்வதா, செய்வதா?' என்று மஹா கோபம் வந்து, அவர்கள் மன்னிக்க முடியாத குற்றம் பண்ணினதாகத் தோன்றி விடுகிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

# ஸ்நேகம்



பள்ளிப் படிப்பு முடித்து கல்லூரிக்குள் ஸ்பீல்பெர்க் காலடி எடுத்து வைத்த சமயம் (1967). ஜார்ஜ் லூகாஸூம் அப்போது சினிமா கல்லூரி மாணவராக இருந்தார்.

Electronic Labyrinth THX 1138:4EB என்கிற குறும்படம், மாணவர்களுக்காக நடத்தப்பட்ட திரைப்பட விழாவில் காண்பிக்கப்பட்டது. படத்தைப் பார்த்து ஸ்பீல்பெர்க் அசந்து போனார். அவரது ரசனைக்கு ஏற்ப படம் எடுக்கப்பட்டிருந்தது. அதுவரைக்கும் ஸ்பீல்பெர்க் பதினைந்து குறும் படங்கள் எடுத்திருப்பார். ஆனால், அத்தனையையும் விஞ்சி நின்றது லூகாஸின் இந்தக் குறும் படம். 'யார் இந்த லூகாஸ்? நான் பார்க்க வேண்டுமே!' என்று ஆசைப்பட்டார் ஸ்பீல்பெர்க்.

ஸ்பீல்பெர்க்கின் முதல் படம், 'டூயல்'

'காட் ஃபாதர்' படத்தை இயக்கிய பிரான்சிஸ் ஃபோர்டு கொப்போலாவுக்கு டூயலின் வெளியீட்டுக்கு முன்பே திரையிட்டுக் காண்பித்தார் ஸ்பீல்பெர்க். அப்போது டூயலின் பிரிவியூவை ஜார்ஜ் லூகாஸூம் பார்த்தார்.

படம் முடியவேயில்லை. எழுந்து விட்டார் லூகாஸ்.

'மை காட்! எவ்வளவு அற்புதமாகப் படம் எடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் படத்தின் இயக்குநர் எல்லாரையும் ஓரங்கட்டி விடுவார்!' என்றார். அந்தக் குறும்படம் எடுத்தவர்தான் இந்த லூகாஸ் என்பதை அறிந்த ஸ்பீல்பெர்க் அப்படிச் சந்தோஷப்பட்டார்.


* 'ஜாஸ்' படத்தில்...

ஹாலிவுட் நட்பு


* ஸ்பீல்பெர்க் - ஜார்ஜ் லூகாஸ்

# மீசைக்கார நண்பா!

1977ல் வெளியான 'ஸ்டார் வார்ஸ்' வசூலில் சக்கைபோடு போட்டாலும் பட



வெளியீட்டுக்கு முன்பு நிறைய பேர் 'படம் நன்றாகவே இல்லை' என்றொரு அபிப்ராயத்தை உருவாக்கியதால் நிறைய வியாபாரச் சிக்கல்களைச் சந்தித்தது. லூகாஸின் மனைவி படம் பார்த்துவிட்டு, 'என்னங்க இப்படி?' என்று அழ ஆரம்பித்துவிட்டார்.

ஸ்பீல்பெர்க் வரவழைக்கப்பட்டார்.

✱ 'ஸ்டார் வார்ஸ்' படத்தில்...

சில வாரங்களுக்கு முன்னால்தான், ''உன் 'ஜாஸ்' படத்தை என் 'ஸ்டார் வார்ஸ்' பீஸ் பீஸாக்கப் போகிறது'' என்று கூளுரைத்திருந்தார் லூகாஸ். படம் பார்த்த ஸ்பீல்பெர்க் ஒரு காகிதத்தில் படத்தைப் பற்றிய விமர்சனத்தை எழுதிக் கொடுத்து, ''ஆறு மாதம் கழித்து பிரித்துப் பார்'' என்று மட்டும் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

படம் வெளிவந்து ஹாலிவுட் பார்க்காத வசூலை (800 மில்லியன் டாலர்கள்) அள்ளியது.

எல்லா அலைகளும் ஓய்ந்த பிறகு ஸ்பீல்பெர்க் கொடுத்த காகிதத்தைத் திறந்து பார்த்தார் லூகாஸ்.

**'நிச்சயம் இந்தப் படத்தின் வசூல் நூறு மில்லியன் டாலரைத் தாண்டும்'** என்று அதில் எழுதப்பட்டிருந்தது. 'மீசைக்கார நண்பா உனக்கு ரோஷம் அதிகம்டா... ரோஷம் அதிகம்டா அதைவிடப் பாசம் அதிகம்டா...' என்று தமிழ் சினிமா பாடல் ஒலிக்காத குறைதான். அவ்வளவு குஷி ஸ்பீல் பெர்க்குக்கு!

ஹாலிவுட் வரலாற்றை எழுதும்போது இந்த இரு பெரும் இயக்குனர்களைப் பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. இருவருக்கும் இடையே 42 வருட நட்பு உண்டு. தொழிலில் இருவருக்கும் பெரிய போட்டியே உண்டென்றாலும், அதனால் நட்பைச் சிறிதும் பாழாக்காதவர்கள். இன்றைக்கும் பேட்டிகளில் ஒருவரையொருவர் வியந்துதான் பேசுவார்கள். இருவருமே ஹாலிவுட்டின் பிதாமகன்கள். வி.வி.ஐ.பி.க்கள், ஒத்த கருத்துடையவர்கள் என்பதையெல்லாம் தாண்டி ஓர் ஒற்றுமை உண்டு. முகத்தில் வளரும் ரோமங்களை மழித்து மொழு மொழுவென்று இருக்கும் அமெரிக்கர்கள் மத்தியில் இருவரும் புசுபுசு மீசை வளர்ப்பவர்கள். ●

# நீழலோடு உறவாடல்!

சிவகாமி சுற்றும் முற்றும் பார்த்து விட்டு, ''இன்றைக்கு ரதியைத்தான் அழைத்துப் போக வேண்டும். ரதிதான் சத்தம் போடாமல் வருவாள்! ரதி வா!'' என்று கூறிவிட்டு மேலே சென்றபோது, மான் குட்டி மட்டும் அவளைத் தொடர்ந்து சென்றது. மற்ற பட்சிகள் மௌனமாயிருந்த போதிலும், தலையைச் சாய்த்துக்கொண்டும் மற்றும் பலவிதக் கோணங்கள் செய்து கொண்டும் ரதியைப் பொறாமை ததும்பிய கண்களால் நோக்கின.

கொல்லைப்புறத்தில் வீட்டைச் சேர்ந்தாற்போல் மல்லிகை, முல்லை, அலரி, பாரிஜாதம், சம்பங்கி முதலிய பூஞ்செடிகளும் கொடிகளும் காணப்பட்டன. அவற்றையெல்லாம் தாண்டி மரங்களடர்ந்த வனப் பிரதேசத்துக்குள்ளே சிவகாமி பிரவேசித்தாள். அந்தக் காட்டில் நடக்கும்போது அவள் ரதியிடம் பின்வருமாறு சொல்லிக்கொண்டு போனாள்.

''என்ன ரதி! அப்பாவுக்கு என் அரங்கேற்றத்தின்போது இரண்டே இரண்டு பேர் வரவில்லை என்றுதான் வருத்தமாம்! இந்தப் புத்த பிக்ஷு வந்து என் அரங்கேற்றத்தைப் பார்க்கவில்லையென்று வருத்தம் என்ன வந்தது...? யாருடைய பாராட்டுதலைப் பெறுவதற்காக நான் இரவு பகலாய்ப் படாதபாடுபட்டு இந்த நிருத்தியக் கலையைப் பயின்றேனோ, அவர் அன்றைக்கு வரவில்லை. இந்தப் பெரிய பல்லவ ராஜ்யத்துக்குள்ளே யார் மகா ரசிகரோ, அப்பேர்ப்பட்டவர் வரவில்லை. ஏழு வருடங்களுக்கு முந்தி, நான் உன்னைப் போல் சிறு குழந்தையாய் இருந்த காலத்தில், எவர் என்னுடன் கைகோத்து நின்று தாமும் நடனம் ஆடுவேன் என்று பிடிவாதம் பிடித்தாரோ - தமக்கும் நடனக் கலை சொல்லிக் கொடுக்கும்படி எவர் என் மோவாய்க்கட்டையைப் பிடித்துக்கொண்டு கெஞ்சினாரோ - அவர் வரவில்லை. ரதி நீயே சொல்லு! ஆண் பிள்ளைகளைப் போல் பொல்லாதவர்கள் இந்த உலகத்தில் உண்டா...?''

ரதி பாவம், சிவகாமி தன்னிடம் சொல்லிக் கொண்டுவந்த விஷயங்களின் முக்கியத்துவத்தைக் கொஞ்சமும் அறிந்து கொள்ளாமல் ஆங்காங்கு தரையில் காணப்பட்ட அருகம்புல்லின் நுனியைக் கடித்து மென்றுகொண்டு வந்தது.

அரை நாழிகை நேரம் அவர்கள் காட்டுக்குள் நடந்து வந்த பிறகு, கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. அந்த இடைவெளியில்



# அமரர் கல்கி

ஓர் அழகிய தடாகம் இருந்தது. அதில் தாமரை, செங்கழுநீர், நீலோத்பலம் முதலிய மலர்கள் செழித்து வளர்ந்திருந்தன. சிவகாமி அந்தக் குளத்தில் இறங்கி நீர்க்கரை ஓரமாய் நின்று தண்ணீரில் தன்னுடைய நிழலைப் பார்த்த வண்ணம் பேசினாள்.

''ரதி! இதைப் பார்! அவர் மட்டும் இனிமேல் எப்போதாவது வரட்டும், நான் முகங் கொடுத்துப் பேசப் போவதே இல்லை! 'போதும், உம்முடைய சிநேகிதம்! போய் விட்டு வாரும்!' என்று கண்டிப்பாய்ச் சொல்கிறேனா, இல்லையா பார்!'' என்று சொல்லிய வண்ணம், அதற்கேற்ப அபி நயம் பிடித்தாள்.

**– 'சிவகாமியின் சபதம்' புதினத்திலிருந்து...**



**கலக்க வருதுப்பா**

# கல்கி

**ரீடர்ஸ் கெட் ரெடி**

**எதையுமே... பெஸ்ட்டா பார்த்து செலக்ட் பண்ணும் ரசனை உடைய திருச்சி மாவட்ட வாசகர்களே!**

## இப்ப உங்க ஊருக்கே வருது கல்கி டீம்...

### எதெல்லாம் எழுதுவீங்க..?

• உங்க ஊர் பெருமைகள் • வெற்றிக் கதைகள் • உங்க ஊர் பெஸ்ட்டைப் பாழ்படுத்தற வொர்ஸ்ட் • பின்னோக்கி இழுக்கும் பிரச்னைகள் • புகழ்பெற்ற கல்வி நிறுவனங்கள் • வி.ஐ.பி. இன்டர்வியூ • மிஸ்டர்/மிஸ் மாவட்டம் யாரு? • தொழிற்சாலைகள்

### அப்ப ஆன்மிகம்?

மோஸ்ட் இம்பார்ட்டண்ட் ஆச்சே!
• மலைக்கோட்டை • ஸ்ரீரங்கம் • சமயபுரம்...
எல்லாமே உங்க மாவட்டம்தானே...

### டூரிஸ்ட் ஸ்பாட்டையும் எழுதுங்க ஸார்...

கண்டிப்பா... கல்லணை, முக்கொம்பு... இன்னும் என்னவெல்லாம் இருக்குன்னு சொல்லுங்க

### எழுத்தாளர்களுக்கு...?

• நச்சுன்னு கதை கொடுங்க • ஜில்லுன்னு ஜோக்ஸ் தாங்க • துணுக்கு தட்டிவிடுங்க • ஸ்பெஷலா கவிதை அனுப்புங்க

### வாசகர்கள் என்ன பண்ணனும்...?

நீங்கதான் ரொம்ப முக்கியம். உங்க மாவட்டத்தைப் பத்தி நீங்க அனுப்புற தகவல்கள்தான் திருச்சி ஸ்பெஷல் இதழ்களுக்கு அஸ்திவாரம்!

**விவரங்கள் எதிர்ப்பக்கத்துல இருக்கே!**





# திருச்சிக்கு



**ஆமாம்! உங்கள் திருச்சி மாவட்டத்துக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!**

**சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...**

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின்.... பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ் என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**வர்றோம்...**

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 13.12.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருச்சிராப்பள்ளி**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32



**நீங்க ச்சும்மா கோடு போடுங்க...**
**நாங்க உடனே ரோடு போடறோம்!**



இருவேறு துருவங்கள். அரசியலில் எதிரும் புதிருமாய் இயங்கியவர்கள். மூதறிஞர் ராஜாஜி காலமானபோது தந்தை பெரியார் 'ஓ'வென வாய்விட்டுக் கதறி அழுதபோது காலம்கூட கொஞ்சம் கலங்கிக் கண்ணீர்விட்டது. இன்றைய அரசியல்வாதிகளுக்கு இது ஆத்திசூடி!

# நட்பகராதியின் பக்கங்கள்!



* இராஜ ராஜன்

ஓவியர் இராஜ ராஜன் 30 வருடமாக ஓவியத்துறையில் இயங்குபவர். பாண்டிச்சேரி பாரதி பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணிபுரிகிறார். டெல்லி லலித கலா அகடமி வெளியிட்டுள்ள Artist Directory-ல் இவர் பெயர் இடம் பெற்றுள்ளது. 2006-ல் புதுவை அரசின் காலண்டர் இவரின் ஓவியத்தால் வடிவமைக்கப்பட்டது. நட்பு பற்றிய சித்திரங்களைப் பிரத்யேகமாக நமக்குத் தந்துள்ளார்.






சகோதர நட்பு அபூர்வமானது. அதைச் சாத்தியமாக்கிய ஆவணம் இந்த மருது சகோதரர்கள். நட்பு மட்டுமே மேலோங்கிய அதிசயம் அது.



நட்பகராதியின் முதன்மையான பக்கம் இந்த இரட்டைப் புலவர்கள். நடக்க முடியாதவரைப் பார்வையற்றவர் சுமந்து பயணித்த நட்பின் குட்சுமம் இது. இளஞ்சூரியன் இரு வரி தொடங்க முதுசூரியன் மற்ற இரு வரியால் பாடலை எழுதி முடித்த இந்த நட்புக் கல்வெட்டு, 14ஆம் நூற்றாண்டுப் பதிவு. இவர்களின் தொடர்ச்சிதான் எழுத்தாளர்கள் சுபா, ரமேஷ்-பிரேம்... இன்னும் இன்னும்.

தொகுப்பு : அமிர்தா




"உனக்கு ஒரே ஒரு ஃபிரண்டா ஏன்?"
"நான் நட்பைக்கூட கற்பைப் போல்
எண்ணுவேன்."

# 'சிக்சிக்'


"நட்பைப் பத்தி வள்ளுவர்
ஐந்து அதிகாரமா
சொல்லியிருக்கார்."
"ரொம்ப தப்பு டீச்சர்.
நட்பை அன்பாத்தான்
சொல்லணும்.
அதிகாரமா சொல்லக்கூடாது."


"ஒரு வரியில் பதில் சொல்லுடா...
யாருக்கு முக்கியத்துவம் தருவே..?
ஃப்ரெண்டுக்கா? லவ்வருக்கா?"
"ஹி...ஹி... கேர்ள் ஃப்ரெண்டுக்கு"
எஸ்.அபிராமிஸ்ரீ

# ஃபிரெண்ட்


"அவன் என்னோட திக் ஃபிரெண்ட். ஆனா
வளவள ரொம்ப அறுக்குறான் பயமா இருக்கு."
"அப்போ 'திக்திக்' ஃபிரெண்ட்னு சொல்லு."


"என்னோட நட்பு வட்டம்
ரொம்பப் பெரிசு."
"அப்படியா எத்தனை
ஸ்கொயர் ஃபீட்?"
கே.ஆனந்தன்

## சென்ற இதழ் தொடர்ச்சி...



**முன்கதைச் சுருக்கம்:** மிகவும் மனம் விரும்பி மணந்து கொண்டவர்கள் ராதா - நரேன். மணமான ஐந்தாண்டுகளிலேயே எதிர்பாராத பிரச்னை. நரேனுக்கு மூளை மூப்பு வியாதி ஏற்படுகிறது. உடல் இளமையாக இருந்தாலும், உணர்வுகளை வெளிக்காட்ட இயலாதவாறு முகமும் மனமும் இறுகிப் போகிறான் நரேன். நோயோடும், மன உணர்வுகளோடும் போராடும் நரேனுக்கும் சேர்த்து வாழ்வை எதிர்கொள்கிறாள் ராதா. அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் கற்க வாய்ப்பு கிடைத்தும், தாயை இதுபோன்ற சூழலில் தனியே விட்டுச் செல்ல மனமின்றித் தவிக்கும் மகன். உதவிக்கு ஆள் வைத்துச் சமாளித்துக் கொள்வதாக மகனைத் தேற்றி அனுப்பி வைக்கிறாள் ராதா. இப்போது அலுவலகம் செல்லும் நேரங்களில் நரேனைக் கவனித்துக் கொள்ள கோபு பணியாளனாகச் சேர்ந்துள்ளான். என்றாலும் அலுவலகத்திலும், சமூகத்திலும் சந்திக்கும் நபர்கள் ஏற்படுத்தும் மனச் சிக்கல்களை யாரிடம் பகிர்ந்து கொள்வது? தனியே மருகுகிறாள் ராதா. அன்றைக்கு அப்படித்தான் அலுவலகத்தில் இருந்தபோது, கோபுவிடமிருந்து திடீரென்று ஃபோன்...

**என்னை விட்டுப் போயிடு. யாரையாவது கட்டிக்க. சந்தோஷமா இரு**

**வாஸந்தி**

"**நீ**ங்க உடனே வாங்க மேடம்!"

என்ன ஏது என அவன் விளக்கம் கேட்கவில்லை. உடம்பும் மனசும் விதிர்த்தன. இப்படிப் பலமுறை நடந்திருந்தாலும், ஒவ்வொரு முறையும் பதறிப் போகிறது. தான் அவசரமாகச் செல்ல வேண்டியிருப்பதன் காரணத்தை விளக்கி மேலதிகாரிக்கு ஒரு மின்னஞ்சல் அனுப்பிவிட்டு அவள் விரைந்தாள்.

"என்ன ராதா? என்ன ராதா?"

அவளுக்குத் திரும்பிப் பார்க்கக்கூட நேரமில்லை.

யாரோ சொன்னார்கள். "வீட்டிலேருந்து ஃபோன் வந்திருக்கும். புருஷனுக்கு ஏதானும்னா வேலைக்காரன் என்ன செய்வான்?"

வண்டியோட்டும்போது நெஞ்சு படபடத்தவண்ணம் இருந்தது. "ஆண்டவா அவரை ஹிம்சைப்படுத்தாதே."

அவளுக்கு என்ன பிரார்த்தனை செய்வது என்பதுகூட



# அவளது தேர்வு

இப்போது தெரியாமல் போன விஷய மாகிவிட்டது. என்ன வேண்டுவது? குண மாக முடியாத நோயைக் குணப்படுத்து என்பதா? அவர் கஷ்டப்பட்டது போதும்... அவருக்கு முக்தி கொடு என்பதா? எனக்கு முக்தி கொடு என்பதா? எத்தனை வரம் கேட்பது? எந்த வரம் நல்ல வரம்? சாவித்திரியா நான்?

அவள் வீட்டை அடைந்தபோது அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. நரேனை கோபு சாய்வு நாற்காலியில் அமர்த்தி இருந்தான். இரண்டு கைகளை யும் நாற்காலியோடு கட்டியிருந்தான். வாயையும் பட்டையாகக் கைக்குட்டை யினால் கட்டியிருந்தான். அதிசயமாக நரேன் முரண்டுபிடிக்காமல் தோற்றுப் போனவனைப் போல சோர்வுடன் படுத் திருந்தான். அவளைக் கண்டதும் தலை யைக் குனிந்தான், அவளது பார்வையைத் தவிர்ப்பவன் போல.

''என்ன கோபு இது? ஏன் இப்படி அவங்களைக் கட்டி வெச்சிருக்கே?''

''அவங்க என்ன பண்ணாங்கன்னு கேளுங்க. அவங்களைச் சமாளிக்க முடியாமதான் கட்டி வெச்சேன்.''

அவள் வாய்க் கட்டைப் பிரித்த படி, ''என்ன நரேன்?'' என்றாள். நரேனிடமிருந்து பதிலே வரவில்லை. ''என்ன நடந்தது கோபு?'' என்றாள் அவள் பொறுமை இழந்து.

''நான் காலையிலே கஞ்சி எடுத்துக் கொடுக்கறதுக்குள்ளே அவர் இதை முழுக்க விழுங்கப் பார்த்தார்'' என்று ஒரு குப்பியைக் காண்பித்தான்.

அவள் திடுக்கிட்டு அதைப் பார்த்தாள். பூச்சிக்கொல்லி மருந்து. செடிகளுக்கு ஒரு வாளி நீரில் சில துளிகள் கலந்து தெளிப் பது.

''எப்படிக் கிடைச்சது இவங்களுக்கு?''

''தோட்டக்காரன் இவங்க கண்ணுலே படறமாதிரி ஜன்னல் திட்டுலே மறந்து

வெச்சுட்டுப் போயிருக்கான். நல்ல வேளை நான் உடனே கையிலேருந்து குப்பியைத் தட்டி விட்டேன். அதுக்குள்ளே என்னமா திமிர்றாருங்கறீங்க. சமாளிக்க முடியல்லே. கஞ்சியும் வேணாமாம். சரி அப்பமன்னா வாயையும் கட்டிடறேன்னு கட்டிட்டேன்.''

''தாங்க்ஸ் கோபு'' என்றாள் கனவில் பேசுவதுபோல. நரேனின் செயலுக்குக் காரணம் என்ன என்று திகைப்பேற் பட்டது. ''நீ கஞ்சியைக் கொண்டா, நா கொடுக்கறேன்'' என்றாள்.



ஒன்று சேர்ந்தால்
தைரியமாகிறது
உன் பயமும்
என் பயமும்

- க.ஆனந்த்

அவன் அகன்றதும், நரேனின் கைக் கட்டை அவிழ்த்தபடி மெல்லக் கேட்டாள்.

''ஏன் நரேன்? ஏன் அப்படிப் பண்ணினீங்க?'' கேட்கும்போது வழக்கத் துக்கு மாறாகத் தொண்டையை அடைத் தது. யுத்தத்தில் தோற்றுப் போனதைப் போல துக்கமேற்பட்டது. அன்று ஒரு மழைநாளில் அவன் கையைப் பிடித்தபடி கற்களைத் தாண்டியது நினைவுக்கு வந்தது.

''என் மேல நம்பிக்கை சுத்தமா போயிடுச்சா?''

சிறிது மௌனத்துக்குப் பிறகு, ''முட் டாள், ஃபூல்!'' என்றான் நரேன். ''நீ ஒரு ஃபூல்!'' குமுறி வந்த வார்த்தைகளைப் புரிந்துகொண்டு அவள் குழப்பத்துடன் கேட்டாள்.

''எதனாலே?''

''நா உன்னைத் திட்டறேன். திட்டிக் கிட்டே இருக்கேன். அப்படியும் நீ என்னை விடமாட்டேங்கறே. ஏன்? என்னை விட்டுப் போயிடு. யாரையாவது கட்டிக்க. சந்தோஷமா இரு.''

அவள் அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு நம்பமுடியாத திகைப்புடன் பார்த் தாள். கண்களில் நீர்வழிவதைப் பொருட் படுத்தாமல் அவன் கைகளை அழுந்தப் பற்றினாள்; எங்கே அவன் உதறிவிடு வானோ என்கிற பயத்துடன்.

''நா ஏன் உங்களை விட்டுப் போகணும்? எனக்கு உடம்புக்கு வந்தி ருந்தா நீங்க என்னை விட்டுட்டுப் போயி ருப்பீங்களா?''

அவன் அவளையே பார்த்தபடி அமர்ந் திருந்தான். அவள் சொல்வதை அவன் புரிந்துகொண்டிருப்பான் நிச்சயம். அவன் முகத்தில் புன்னகை அரும்பாது. அவன் மனசு சிரித்தாலும், தசைகளுக்கு உணர் வில்லை; மூளைக்கு மூப்பு வந்ததால்.

கோபு கொண்டுவந்த கஞ்சியை அவள் ஸ்பூனால் கொடுக்க ஆரம்பித்தாள்.

ஒரு மிடறு விழுங்கிவிட்டு, ''ஃபூல்!'' என்றான் நரேன். அவனுடைய கை அவள் தோளில் இருந்தது. அவன் கண்களில் நீர் திரையிட்டிருந்தது. மிக லேசாகப் பள பளத்தது.

நல்ல காலம் என்பது பல ரூபங்களில் இருக்கும் என்று அவள் நினைத்துக் கொண்டாள். கலபமாகச் சிரிக்கமுடிந்தது.

ஆகாசத்தில் மிதக்க முடியும் இப் போது. பூமியின் சுமையில்லாமல்; மனத் தின் பாரமில்லாமல்.

(முடிவுற்றது)

# நூல் அறிமுகம்

**கடைசிப் புகையின் கல்லறை - கட்டுரைகள், ஜெயபாஸ்கரன், வழுதி வெளியீட்டகம், 1/129, முதல் தளம், திருவீதி அம்மன் கோயில் தெரு, கிழக்கு கடற்கரைச் சாலை, கொட்டிவாக்கம், சென்னை - 600 041. விலை ரூ.100/-**

''இந்தக் கட்டுரைகள் என் கண்ணெதிரே நடக்கிற, சகித்துக் கொள்ள முடியாத சமூக நிகழ்வுகளின் வெளிப்பாடு'' என்று முன்னுரையில் ஆசிரியர் குறிப்பிடுகிறார். பத்தொன்பது கட்டுரைகள் உளவியல், சமூகம், ஊடகம், சுற்றுச்சூழல்... என்ற தலைப்புகளின் கீழ் தொகுக்கப்பட்டுள்ளன. வாசகத் தளத்தில் ஆசிரியர் ஏற்படுத்த நினைத்த எதிர்வினைகள் பல இடங்களில் நிகழ்கின்றன.

''எந்தக் குழந்தையும் மேதையாக இருக்க வேண்டிய அவசியமே இல்லை. குழந்தையைக் குழந்தையாக வளரவிட்டால் அவர்கள் பிற்காலத்தில் மேதைகளாவார்கள்'' - மூன்று வயதுக் குழந்தைகளை பள்ளி அட்மிஷனுக்காக நுழைவுத் தேர்வு எழுத வைப்போரை யோசிக்கத் தூண்டும் வரிகள்.

நமது மரபின் வரலாறுகளைச் சிதைக்கும் செயல்பாடுகளைக் கண்டிக்கும் வரிகளும் காணக் கிடைக்கின்றன. ''சந்தையிலே நின்னாலும் நீ வீரபாண்டித் தேரு' பாடல் தேனியின் வீரபாண்டிக் கோயில் தேர்த் திருவிழா குறித்த ஆவணம். இந்தப் பாடலை 'மார்க்கெட்ல நின்னாலும் நீ வீரபாண்டி காரு' என்று ரீமிக்ஸ் செய்து பாடினால் அது நமது ஆவணத்துக்கெதிரான துரோகமேயன்றி வேறென்ன?''

தீர்வுகளை வெளிப்படையாகக் கூறாவிட்டாலும், தீர்வை நோக்கிச் சிந்தனையைத் திருப்பும் வினாக்கள் நூல் நெடுகத் தொடர்ந்துள்ளன.

# மரபின் வரலாற்றுக்கு ரீமிக்ஸ் வேண்டாம்!

**தரிசன வேட்கை - தொ.ரா.ஸ்ரீ, வளர்பிறை, 56, ஹபிபுல்லா சாஹிப் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005. விலை ரூ.40/-**

நான், நீ என்று சில கவிதைகள், எந்த நிலைப்பாடும் அற்ற கவிதைகளும் உள்ளன. அனைத்திலும் பொதுவான அம்சம் காதல். ''சாலையில் நின்றவாறு காதலிக்காகக் காத்திருந்தவனின் கண்ணில் கடந்து போகிறாள் புது காதல் நிரம்பிய ஒருத்தி'' - இப்படியாகக் காதல் பேசும் கவிதைகளின் தொகுப்பு.



**- நேயமுகில்**

நண்பர்களாக இருந்தவர்கள் காதல் மலரும் கட்டத்தில் அடித்துக்கொண்டால் எப்படி இருக்கும்?

'ஸ்ரீசாந்தும் நானும் நண்பர்கள். என்னைக் காதலிக்கிறாயா என்று குறுஞ்செய்தி அனுப்பினார் ஸ்ரீசாந்த்!' என்று சில மாதங்களுக்கு முன்பு கன்னட நடிகை டெஸ்ஸி பொபன்னா என்கிற நடிகை (இவர் தமிழிலும் நடித்திருக்கிறார்) பேட்டி கொடுத்தபோது திடுக்கிட்டுப் போனார் ஸ்ரீசாந்த்.

இதற்கு ஸ்ரீசாந்த் கொடுத்த பதில்: 'டெஸ்ஸின்னா யாருங்க? அவங்க ஏன் என்னைப் பத்தித் தேவையில்லாம பேசணும்? நடிகையாகப் போராடுகிற ஒரு நடிகைகிட்ட நான் ஏன் என் காதலைத் தெரிவிக்கப்போகிறேன். நான் ஞாபகம் வைத்துக்கொள்வதற்கு அவர் என்ன ஏஞ்சலினா ஜோலியா? விளம்பரத்துக்காக ஏன் தான் என்னைப் பயன்படுத்திக்கொள்கிறார்களோ, மிகவும் கேவலமான உத்தி இது. அந்தப் பெண்ணின் போன் நம்பர் எல்லாம் என்னிடம் கிடையாது.'

விஷயம் இதுதான். இரண்டு பேரும் ஒரு குளிர்பான விளம்பரப்படத்தில் சந்தித்துக் கொண்டார்கள். நண்பர்களானார்கள். ஆனால் நட்பு, காதல் விவகாரங்களை டெஸ்ஸி பத்திரிகைகளுக்குக் கடலைமிட்டாய் போல கொடுக்க ஆரம்பித்தவுடன் சாந்தகுமாரன் ஸ்ரீசாந்த் வெகுண்டெழுந்துவிட்டார். இப்போது சமர்த்தாக கிரிக்கெட் மட்டும் விளையாடிக்கொண்டிருக்கிறார் ஸ்ரீசாந்த்.

## சாஸ்திரியை பிழைத்துப் போ என்று மன்னித்து விட்டார் ராஜு

**1986.** சென்னை சேப்பாக்கத்தில் இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் இடையே டெஸ்ட் மேட்ச். ஐந்தாவது நாள். கடைசி ஓவர். கடைசி இரண்டு பந்துகள். மனிந்தர் சிங் பேட்டிங். மறுமுனையில் ரவி சாஸ்திரி. ஒரு விக்கெட் மீதம். ஒரு





ரன் எடுத்தால் வெற்றி.

ஆனால் அதே ஒரு விக்கெட்டைப் பறிகொடுத்தால் மேட்ச் டை.

ஸ்பின்னர் க்ரேக் மேத்யூஸ் பந்து வீச அது மனிந்தர் சிங்கின் பேடில் (கால் மட்டை) பட்டது. அடுத்த அரைநொடியில் கையை மிக வேகமாக உயர்த்தினார் அம்பயர் விக்ரம் ராஜு. மனிந்தர் சிங் அவுட். மேட்ச் டை ஆனது. கிரிக்கெட் வரலாற்றின் இரண்டாவது டை.

மேட்ச் இரு அணிகளுக்கும் சாதகமாகவே நடந்து முடிந்திருந்தது. ஆனால் டை ஆன மேட்சை ஆஸ்திரேலிய வீரர்கள் பெரிய வெற்றிபோல கொண்டாடி மகிழ்ந்தார்கள். தோல்வி கண்டதுபோல இந்திய வீரர்கள் நொடிந்து போனார்கள். பெவிலியனுக்குத் திரும்பிச் சென்றபிறகும் சாஸ்திரியால் பொறுக்க முடியவில்லை. விறுவிறுவென அம்பயர் அறைக்குச் சென்றார்.



'நான் சரியாகத்தான் சொன்னேன். வரலாற்றில் இடம்பிடித்த ஒரு மேட்ச்சில் இடம்பெற்றிருப்பதை நான் பெருமையாக நினைக்கிறேன்' என்று ராஜு விளக்கம் சொல்ல, ரவி சாஸ்திரிக்கு வந்ததே கோபம். துணிச்சலாக, காதுகூசும் கெட்ட வார்த்தைகளை அம்பயர்மீது வீசிவிட்டுச் சென்றார்.

'இன்று அப்படி நடந்திருந்தால் நான் பல வருடங்களுக்குத் தடை செய்யப்பட்டிருப்பேன்' என்கிறார் ரவி சாஸ்திரி. 'இன்றைக்கும் நான் சொல்வேன். அது அவுட்தான்' என்கிறார் விக்ரம் ராஜு. அப்போதெல்லாம் கிரிக்கெட்டில் மூன்றாவது அம்பயர், மேட்ச் ரெஃப்ரி என்றெல்லாம் அம்பயர் குழு கிடையாது. இதனால் சாஸ்திரியை, 'பிழைத்துப் போ' என்று மன்னித்து விட்டார் ராஜு.

**- ச.ந.கண்ணன்**



# தோழியா காதலியா?




★ பேத்தியுடன் லேனா, ரவி

வழக்கமாக உணவருந்தச் செல்லும் ஹோட்டலுக்கு லேனா தமிழ்வாணன் மட்டும் சென்றபோது, ''என்ன ஸார்... உங்க ஃப்ரெண்டைக் காணோம்'' - சிரித்துக்கொண்டே கேட்டார் சர்வர்.

''அவர் என் ஃப்ரெண்ட் இல்லைங்க... என் தம்பி ரவி'' என்று தமிழ்வாணன் சொல்ல, சர்வரின் முகம் வியப்பால் விரிந்தது. ''என்ன ஸார் சொல்றீங்க... உங்களைப் பாத்தா அண்ணன் தம்பி மாதிரி தெரியலையே ஸார். முன்பின் தெரியாதவங்க சந்திக்கக்கும்போது ஏதோ ஒரு இடத்துல நட்பாய்டுவாங்க. அண்ணன் - தம்பிக்குள் எப்படி ஸார் நட்பு சாத்தியம்?''

அதற்கு லேனா தமிழ்வாணன் சிரித்துக் கொண்டே சொன்னது இதுதான்...

''எங்கள் தந்தை தமிழ்வாணன் எதிர் பாராதவிதமாக இறந்தபோது துக்கத்துக்கு வந்த உறவினர்கள் எங்களிடம் 'அம் மாவை நல்லா பாத்துக்கங்க... ரெண்டு பேரும் ஒத்துமையாக இருங்க' என்றார்கள். எங்க ரெண்டு பேரோட மனசுலயும் இது ஆழமா பதிஞ்சிருச்சு. சின்ன வயசுல ரெண்டு பேரும் சண்டை போட்டுக்கிட்டு மாதக்கணக்கா கூட பேசாம இருந்திருக் கோம். ஆனால், அப்பாவோட மரணத் துக்குப் பிறகு குடும்பத்திலும், பதிப்பக

## கருத்து வேறுபாட்டுக்கு இடம் உண்டு. ஆனால் மனவேறுபாட்டுக்கு இடம் இல்லை...

# தாண்டும் நட்பு

விஷயங்களிலும் யாருக்கு என்ன பொறுப்புன்னு பேசி முடிவு பண்ணிக்கிட்டோம். அந்த முடிவின் மீது நாங்கள் மிகுந்த மதிப்பும் மரியாதையும் வைத்திருப்பதால் தான் எங்கள் நட்பு கெட்டிப்பட்டிருக்கிறது'' என்கிறார்.

''எங்க நட்பு 25 வருஷத்துக்கும் மேல தொடருதுன்னா அதுக்கு முக்கியமான காரணம் புதன் கிழமைதான்'' என்கிறார் ரவி (லேனாவின் சகோதரர்). அதென்ன புதன் கிழமை?

''ஒவ்வொரு புதன் கிழமை சாயந்தரமும் நாலுமணிக்கெல்லாம் மெரினா பீச்சுக்குப் போயிடுவோம். கார் டிரைவர்க்குக்கூட தடாதான். இரவு பத்து மணி வரைக்கும் அரட்டை அடிப்போம். அதுல அரசியல், நகைச்சுவை, சினிமா, ஸ்போர்ட்ஸ், நட்பு, துரோகம்... எல்லாம் இடம்பெறும். பத்து மணிக்கு ஹோட்டல் சாப்பாடு'' என்று நட்பை நளினமாக்கும் ரகசியம் சொன்னார் ரவி.

இருவருக்கும் இடையே வயது வித்தியாசம் இரண்டுக்கும் குறைவு என்பதால் அண்ணன், தம்பி என்று அழைப்பது கிடையாது. ரசனை இருவருக்கும் மாறுபட்டாலும் உடை ஒரே கலர்தான். சமீபகாலமாக ரவி லேனாவைப் போல் கண்ணாடி அணிகிறார்.

**உங்களுக்குள் கருத்து வேறுபாடு வந்ததே இல்லையா?**

''புதன் கிழமைகளில் நாங்கள் பீச்சில் பேசிக் கொள்வதை யாராவது கேட்டால், எதற்காக இவர்கள் இப்படி சண்டை போட்டுக் கொள்கிறார்கள் என்று நினைப்பார்கள். எந்த விவாதம் என்றாலும் ஒருகட்டத்தில் இருவரில் ஒருவர் அமைதியாகி, விவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுவோம்; கருத்து வேறுபாட்டுக்கு இடம் உண்டு. ஆனால் மனவேறுபாட்டுக்கு இடமே இல்லை...'' என்ற லேனா மேலும் கூறினார்.

''ஒரு கட்டத்தில் நான் எழுதிவந்த ஒரு பக்கக் கட்டுரைகளை நிறுத்திவிடலாமா என்று நினைத்தபோது, 'நல்லதொரு விஷயத்தை, நச்சென்று ஒரே பக்கத்தில் கச்சிதமாகச் சொல்வது எல்லோருக்கும் வந்து விடாது. நிறுத்தாதீர்கள்' என்று எழுதத் தூண்டியது ரவிதான். 1600க்கும் மேல் ஒரு பக்கக் கட்டுரைகள் எழுதி விட்டேன் இதுவரை. பத்திரிகை உலகில் இது ஒரு சாதனை'' என்று ரவிக்கு நன்றி சொல்லும் லேனா, ''என்னைப் போலவே அவரும் தன் உலகளாவிய பயண அனுபவங்களைப் புத்தகமாக எழுத வேண்டும் என்பதே என் ஆசை'' என்கிறார்.

''எங்களைப் போலவே எங்களுடைய மனைவியரும் நெருங்கிய சிநேகிதிகளாக இருக்கிறார்கள். இது எங்கள் நட்புக்கு இன்னும் வலு சேர்க்கிறது.

சின்ன வயசில் பிள்ளைகள் சண்டை போடுகிறபோது, இரண்டு பேருமே அவரவர் பிள்ளைகளை மட்டுமே கண்டிப்போம். எங்களின் நட்பைப் பார்த்து வளர்ந்ததால், நான்கு பிள்ளைகளும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் போலவே மிகவும் ஒற்றுமையாக இருக்கிறார்கள்.''

**– எஸ்.சந்திரமௌலி**

சினிமாத் துறையில் ஒவ்வொரு கால கட்டத்தில் ஒரு 'டிரண்ட் செட்டர்' வருவதுண்டு. அந்த வகையில் இயக்குநர் ஷங்கர் என்றாலே 'பிரம்மாண்டம்'தான்!

ஊட்டியில் 'ஜென்டில்மேன்' படப்பிடிப்பு. அன்றைக்கு 'உன் வீட்டுத் தோட்டத்தில் பூவெல்லாம் கேட்டுப்பார்' பாடல் காட்சியை பைகாரா ரோட் அருகில் தைல மரங்களின் நடுவில் ஷூட் செய்து கொண்டிருந்தார்கள். அங்கு நடந்த பத்திரிகையாளர் சந்திப்பில் படத்தைப் பற்றிச் சொன்ன இயக்குநர் ஷங்கரிடம், 'உங்களைப் பற்றிச் சொல்லுங்க' என்று கேட்டபோது,



# ஷங்கர் வீட்டுத்



''என்னைப் பற்றி எழுதுவதைவிட, படத்தைப் பற்றி எழுதுங்க நல்லாயிருக்கும்'' என்றார். (அப்போது மட்டுமல்ல... இப்பவும் ஷங்கர் தன்னைப் பற்றிக் குறிப்பிடுவதைத் தவிர்த்து, தம் படைப்பைக் குறித்தே சொல்வார்.)

நீர்நிலை அருகில் படப்பிடிப்புக்காக இடமாற்றம் செய்தபோது நானும் அவரும் பேசிக்கொண்டே சென்றோம்.

''படத்தின் ஒரு காட்சியைச் சொல்லுங்க. 'ஷூட்டிங் ஸ்பாட்' என்ற பகுதியில் எழுத வேண்டியிருக்கும்'' என்றதும்,

''அப்பளத்தில் 'கிச்சா - சுசிலா' என்று பெயரைப் பதிவு செய்து மதுபாலா அர்ஜுனிடம் காதலை வெளிப்படுத்துகிறார். அந்த அப்பளம் வேறொரு கல்யாண வீட்டு அப்பளங்களில் கலந்துவிட பிரச்னை ஏற்படுகிறது. அதைக் கண்டு கிச்சா கோபத்தில் கொதிக்கிறார். சுசிலா தன் காதலை எப்படி வெளிப்படுத்தினாள்... என்பதுதான் காட்சி'' என்று விளக்கினார்.

**1963**ம் ஆண்டு, ஆகஸ்ட் 17, கும்பகோணத்தில் பிறந்தவர் ஷங்கர். ஆரம்பத்தில் அவரிடம் இருந்தது 'நடிப்புத் துறையில் சாதிக்க வேண்டும். ஒரு பெரிய நட்சத்திரமாக வேண்டும்' என்ற ஆர்வம்தான். தில்லை நடராஜன் நாடகக் குழுவில்

சேர்ந்து ஒரு நாடக நடிகராகத் தமது கலை வாழ்வைத் தொடங்கினார்.

பிறகு இயக்குநர் எஸ்.ஏ.சந்திரசேகரிடம் சென்று நடிக்க வாய்ப்பு கேட்டபோது, "நடிப்பதற்கு வேண்டாம். உதவி இயக்குநராக வந்துவிடு" என்று சேர்த்துக் கொண்டார். அவரிடம் பதினேழு படங்கள் வரை அசிஸ்டென்டாக, அசோஸியேட்டாகப் பணிபுரிந்தார் ஷங்கர்.

உதவி இயக்குநராக இருந்த நேரத்தில் 'சீதா' உட்பட





## இவங்க இப்படித்தாங்க... 8

கவுண்டமணி, விக்ரம் தர்மா மாஸ்டர் இவங்க கால்ஷீட் மட்டும் தான் இருந்தது. அதுக்கேத்தபடி ஐடியா செய்தோம். அர்ஜுன், கவுண்டமணி மாறு வேஷத்தில் பெரிய நகைக் கடையில்

# தோட்டத்தில் பூக்களுக்கெல்லாம் சம்பளம்!

சில படங்களில் நகைச்சுவை வேடங்களில் தோன்றி தமது திறமையை வெளிப்படுத்தி நடிப்பு தாகத்தைத் தணித்துக் கொண்டார். அவர் பெரிய இயக்குநர் ஆன பின் நடிப்பின் பக்கம் போகவில்லை. 'காதலன்' படத்தில் பாடல் காட்சியில், ஒரே ஒரு செகண்ட் தோன்றினார்.

1993ல் தயாரிப்பாளர் கே.டி.குஞ்சுமோனிடம் கதை சொல்லி 'ஜென்டில்மேன்' படம் வாயிலாக ஷங்கர் இயக்குநரானது ஊரறியும்.

சினிமாவில் சென்டிமென்ட்ஸ் அதிகம். முதல் காட்சி படமாக்க, ஏதேனும் சென்டிமென்ட்டுடன் வைப்பார்கள். ஷங்கர் எப்படி...?

"சென்டிமென்ட் எல்லாம் பார்த்து முதல் சீன் ஷூட் பண்ணவில்லை, முதல் காட்சியே கொள்ளையடிக்கிற மாதிரிதான்.

முதல் நாள் ஷூட்டிங் அன்று அர்ஜுன், கொள்ளை அடிப்பார்கள். இதுதான் நான் முதன் முதலாகப் படமாக்கிய காட்சி."

ஷங்கர் உதவி இயக்குநராக இருந்தபோது குழந்தை நட்சத்திரமாக நடித்த விஜய்க்கு கலைஞர் கருணாநிதியின் வசனத்தை எப்படிப் பேசுவது என்று பயிற்சி அளித்திருக்கிறார். இதை விஜய்யும் சொல்லியிருக்கிறார்.

**சபீதா ஜோசப்**

ஷங்கரின் உதவி இயக்குநர் வாழ்க்கை கஷ்டமும், அவமானமும் நிறைந்தது. பல நாட்கள் பட்டினியோடு கழிந்திருக்கின் றன. ''தான் பெற்ற துன்பம் பெறுக இவ்வையகம்'' என்பவர்கள் மத்தியில், ''எல்லோரும் இன்புற்றிருக்க நினைப் பதுவேயன்றி வேறொன்றறியேன் பரா பரமே'' என்றிருப்பவர் ஷங்கர்.

தாம் கஷ்டப்பட்டதுபோல் தம்மிடம் வேலை பார்ப்பவர்கள் கஷ்டப்படக் கூடாது என்று நினைப்பவர். தம்முடைய அசிஸ்டெண்ட்களை மரியாதையாக நடத்துவதுடன் அவர்கள் தம் குடும்பத் தாராலும் மதிக்கப்பட வேண்டுமென்று எண்ணுபவர் ஷங்கர்.

தம்மிடம் பணியாற்றும் உதவி இயக்கு நருக்கு மாதம் ரூ.5000 சம்பளம் தருகிறார். மாதத்தின் முதல் வாரமே அந்த உதவி யாளர்களின் வீட்டுக்குப் பணம் சென்று விடும். அவரது அலுவலகத்தில் எந்த நேரமும் உணவு, டீ, காப்பி சூடாக இருக்கும். மூன்று வேளையும் நன்றாகச் சாப்பிட்டு விட்டு கதை விவாதத்தில் கலந்து கொள்ளலாம். எனக்குத் தெரிந்து எந்தப் பெரிய இயக்குநரின் அலுவல கத்திலும் இதுபோன்ற வசதிகள் கிடை யாது.

தம்மிடம் பணியாற்றுபவர் வெளியே படம் இயக்கச் சென்றால் வாழ்த்தி அனுப்புகிறார். வாய்ப்பு கிடைக்கா விட்டால், அதுவரை சும்மா இராமல் அவரது அலுவலகத்தில் எப்போதும் போல வந்து கதை விவாதத்தில் கலந்து கொள்ளலாம்; சம்பளம் பெறலாம். (அவரது உதவியாளர் செல்வராஜ் சொன்னது இது.)

கதை விவாதம் என்றால் காலை முதல் இரவு வரை அறையிலேயே பழியாகக் கிடப்பதில்லை. மாலை 5 மணிக்கு ரிலாக்ஸ்டாக, தம் உதவியாளர்களுடன் ஷட்டில்காக் விளையாடிக் கொண்டிருப் பார்.

ஷங்கர், சத்தமாகப் பேசமாட்டார். மென்மையானவர். அதே நேரத்தில் கோபம் நிறைய. நகைச்சுவை உணர்வு சற்று கூடுதலாகக் கொண்டவர்.

சமீபத்தில் என்னைப் பார்த்தபோதும் ''எப்படியிருக்கீங்க சபீதா...?'' என அன்பாக விசாரித்தார். எங்கும் எப்போதும் ஷங்கர் இப்படித்தான்!

**(அடுத்த வாரம் : அசின்)**



## நட்பு... வெவ்வேறானது?

பெண் தோழிகள் தனக்கு
நிறைய என்று
பெருமையாய்ச் சொல்லிக்கொள்வான்...
மனைவியின் ஒப்புதலோடு
அவ்வப்போது அவர்களை வீட்டுக்கும்
அழைத்து வந்து
அளவளாவி உபசரிப்பதும் உண்டு.
ஆனால்...
ஒரே ஒருமுறை
மனைவியின் தோழனென்று ஒருவன்
வீட்டுக்கு வந்தபோது
வெடித்தது பூகம்பம்
விரிசலாயிற்று தாம்பத்யம்...!

**- சோ.சுப்புராஜ்**

# பழசிராஜா

● மண்ணைக் காக்க ஆங்கிலேயருக்கு எதிராகப் போராடும் மன்னவன் கதைதான் பழசிராஜா!

● யார் இந்தப் பழசிராஜா...? ஏறக்குறைய கேரளாவின் கட்டபொம்மன்.

● கட்டபொம்மனுக்கு எப்படி ஊமைத்துரையோ அதுபோல பழசிராஜாவுக்கு, தளபதி எடக்கன் குஞ்சன். எடக்கன் குஞ்சன் கேரக்டரில் நம்ம சுப்ரீம் ஸ்டார் சரத்குமார்!

● கட்டபொம்மன், ஊமைத்துரைகள் இருக்கும்போது எட்டப்பன்கள் (சுமன்) இல்லாமலா கதை நகரும்...? அவர்களால், இழந்த மண்ணை மீட்கப் போராடுகையில், உயிரையே விடும் பழசிராஜா... எவ்வளவு உன்னதமானவன் என்பதைத் திரைக் கதையில் உணர்த்தியிருக்கிறார் இயக்குநர் ஹரி ஹரன்.

● பழசிராஜாவாக படம் நெடுக விரிந்து வியா பிக்கிறார் மம்முட்டி. வாள் சண்டையும் வீர வசன மும் அவர் பாத்திரத்தை முக்கியமாக்குகின்றன.

● தளபதி எடச்சன் குஞ்சன் கேரக்டரில் இறுக் கமும் வீரமும் காட்டி நம்மை நிமிர்ந்து உட்கார வைக்கிறார் சரத்!

● எட்டப்பன் வேலை பார்க்கும் சுமனை வாள் சண்டையில் கொல்வது, பழசிராஜாவின் வளர்ப்புத் தந்தையென ஃப்ளாஷ்பேக் ஓப்பன் பண்ணுவது, தன்னைத் தானே மாய்த்துக் கொள்வ தென, கதை சரத்குமாரைச் சுற்றி நிறையவே சுழல் கிறது.

● மலைவாழ் பெண்ணாக வரும் பத்மப்ரியா கேரக்டரில், பாறையைப் போல வலிமை அதிகம்.

● கனிகா அபிநயத்துக்குச் சோகம் கொட்டுகிறார். உடையில் தேவைக்கு அதிகமாகவே தாராளம்.

● ஆரம்பத்தில் அரை மணி நேரம் நாடகத்தனமாக நகரும் காட்சிகளால் கண்கள் சலிப்படைகின்றன.

● எனினும் இளையராஜா இசையில் ராம்நாத் ரெட்டியின் ஒளிப்பதிவில் படம் நிமிர்கிறது.

● ஹாலிவுட் ரேஞ்சுக்கு, பழசிராஜா பரிமளிக்கிறார்.

- மகிமைராஜன்



# உள்ளம் பேசும் சைகை மொழி!

அந்தக் கடை வாசலில் நின்ற நண்பர்கள் கும்பலில், ஒருவர் வந்ததும் ஏற்கெனவே நின்றிருந்த ஒருவர் முகம் திருப்பிக் கொள்கிறார் கோபமாக. புதியவர் அவர் அருகில் போய் நின்று சமாதானம் கோருகிறார். இரு கரங்களையும் ஒன்றுக்குள் ஒன்று லாக் செய்து காட்டுகிறார் புதியவர். கோபக்காரர் மசியவில்லை. வலது உள்ளங்கையை மூடித் தன் மார்பின் மேல் வைத்து அசைத்துக் காட்டுகிறார். இப்போது கோபம் கொஞ்சம் நெகிழ்ச்சியாக மாறுகிறது. தோளில் கை போட்டு அணைத்துக் கொள்கிறார். மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்த மற்றவர்கள் தோள்களுக்கு மேல் இரு கரங்களையும் உயர்த்தி விரித்து அசைக்கின்றனர்.

கைகளை லாக் செய்வது, நட்பைக் குறிக்கும். கையை மூடி மார்பில் வைத்தல் மன்னிப்பு கோருதல், கைகளைத் தோளுக்கு மேல் விரித்து அசைத்தால் கரவொலி எழுப்புதல் - இதெல்லாம் சிறப்பு மொழிங்க. ஆம், அங்கு நின்றிருந்தவர்கள் காது கேளாத வாய் பேசாத நண்பர்கள்.

இந்த நண்பர்கள் குழுவினரை பழநி, விஜயரங்க முதலி தெருவின் கோபி பெட்டிக்கடை வாசலில் தினமும் காலையில் காணலாம். கோபி என்பவரும், காது கேளாத வாய் பேசாத தன்மை உடையவர்.

பெயர்கள் கேட்டால், ஆள்காட்டி விரல் கொண்டு அவரவர் கை மீது எழுதிக் காட்டுகின்றனர். 'காளிதாசன்' என எழுதினோம். அவர் தன் தலையில் தட்டி செல்லமாகக் கோபம் வெளிப்படுத்தி, உடனே பால்பாய்ண்ட் எடுத்து தன் உள்ளங்கையில் வெகு அழகாக எழுதிக் காட்டினார். அட.... அவர் பெயர் காளிதாஸ்! இந்தப் பிரச்னையே வேண்டாமென தன் கையில் பச்சை குத்தியிருந்தார் வலங்கையப்பன். பழநியில் ஒத்தை மாட்டு வண்டி ஓட்டுகிறார். இவரைத் தவிர முருகானந்தம், ராஜேந்திரன், பாண்டி, சீனிவாசன், கண்டிமுத்து எல்லோரும் எலெக்ட்ரீசியன்கள்தான்.

இராமமூர்த்தி வீட்டருகே, தையல் கடை வைத்து நடத்தி வருகிறார். 'பெண்களுக்கான ஜாக்கெட்கூட கச்சிதமா தைச்சுத் தருவாரு' என்கிற சர்டிபிகேட் இவருக்கு ஊரில் உண்டு. முப்பத்தைந்து வயதாகும் மணிகண்டன், ஜெராக்ஸ் சென்டர் நடத்தி வருகிறார். ''எங்க ஷாக் அடிக்கிற வேலை போலவே எங்க ஃப்ரெண்ட்ஷிப்பும் பலருக்கும் வியப்பான ஷாக்தான்'' என்கிறார்கள்.

இவர்களை ஒன்றிணைப்பது மற்றும் இக்கட்டான சமயங்களில் வழிகாட்டுவது என இன்னொரு நண்பர்கள் குழுவும் இயங்கி வருகிறது. பாலமுருகன், ஆனந்தன்,





● நட்பு வட்டம்

தங்கபாண்டி, தினேஷ் மற்றும் நாகராஜன் ஆகியோர் அதில் முக்கியமானவர்கள். இவர்களில் பலரும் எலெக்ட்ரீசியனாக உள்ளனர்.

காது கேளாத வாய் பேசாத தன்மை உடைய அவர்கள் ஒவ்வொருவரிடமும் செல்ஃபோன் உள்ளது. எதற்கு அது? எஸ்.எம்.எஸ். அவர்களது நண்பன். Where என்று மெசேஜ் அனுப்பினால், தாம் இருக்கும் இடம் குறித்து டைப் செய்து உடனே பதில் மெசேஜ் அனுப்பி வைக்கின்றனர்.

இவர்களின் ஒற்றுமையும், ஒருவருக்கொருவர் உதவி செய்யும் விதமும் பிரமிப்பு தருபவை. பாண்டியின் கல்யாணத்துக்கு, முருகானந்தம் அறுபதாயிரம் ரூபாய் தந்து உதவியுள்ளார். வட்டியில்லாக் கடன். ஒருமுறை சீனிவாசனுக்கு டூ வீலர் ஆக்சிடென்டில் பலத்த காயம். மதுரை ஜி.ஹெச்.சில் எட்டு மாதம் சிகிச்சை. இந்தப் படை முழுவதும் அங்கு கிளம்பிவிட்டது. வார விடுமுறையிலும் அங்கு ஆஜராகினர்.

இவர்களுக்கு மிகவும் பிடித்த சினிமா நடிகர்? நடிகை? அல்டிமேட் ஸ்டார் அஜித். கொங்கு மருமகள் ஜோதிகா. இருவருமே காது கேளாத வாய் பேசாத கேரக்டர்களில் நடித்திருக்கிறார்கள். அஜித் நடித்த 'வாலி', ஜோதிகாவின் 'மொழி' திரைப்பட சி.டி அவர்கள் ஒவ்வொருவரிடமும் உள்ளது. விருப்பப்படும் நேரங்களில் வீட்டில் போட்டுப் பார்த்துக்கொண்டே இருப்பார்களாம். இவர்களின் உள்ளம் பேசும் ஒரே மொழி தான் என்ன? வீதி மணலில் விரல்கொண்டு எழுதிக் காட்டினார்கள் 'நட்பு' என்று!

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# துறுதுறு நட்பு





**த**ன் முதல் படத்திலேயே சட்டென யாவரின் கவனத்தையும் ஈர்த்திருக்கிறார் 'திருதிரு துறுதுறு' படத்தின் இயக்குநர் நந்தினி. பனித்துளிக்கு கூலிங்கிளாஸ் போட்டது போலிருக்கும் நந்தினி, தன் டைரியின் நட்புப் பக்கங்களைப் புரட்டுகிறார்.

''என் நட்பின் ஆரம்ப காலமே ஒரு சோகம்ங்க. நான் இரண்டாவது படிக்கிறப்ப தேனாம்பேட்டையில் இருந்தது என் வீடு. எங்க பக்கத்து வீட்டில் திவ்யாங்கிற பொண்ணு இருந்தா. நான் எப்போதும் பொம்மைகளோடு அவள் வீட்டிலேயே விளையாடிட்டு இருப்பேன். திடீர்னு ஒரு நாள் அவ செத்துப் போயிட்டதா சொன்னாங்க. அந்த வயசுல எனக்கு எதுவும் தெரியாது. பிறகு கொஞ்ச நாள் கழிச்சுதான் தெரிஞ்சது அவளுக்கு ஹார்ட் ப்ராப்ளம்னு.

அதற்கு அப்புறம் ரொம்ப நாள் எனக்கு ப்ரண்ட்ஸுன்னு யாருமே இல்லை. +1ல் கீதா, வேதான்னு இரண்டு ஸ்நேகிதிகள். ஹிந்து வித்யாலயாவுல படிக்கிறப்பதான் என் பார்வை பாட்டு, நடனம், கவிதை, வயலின் வாசிக்கிறதுன்னு திரும்பியது. அங்கேதான் இந்த நந்தினிக்குனு ஒரு உலகம் ஆரம்பிச்சது. என் கிளைகளை மெல்ல மெல்ல கலை சார்ந்து விரிக்க ஆரம்பிச்சேன். கண் மூடித் திறப்பதற்குள் +1, +2 முடிஞ்சு போச்சு'' என்று சொல்லும் நந்தினி, தன் கல்லூரி நாட்கள் மனத்தில் சம்மணமிட்டு அமர்ந்திருப்பதையும் கூறுகிறார்.

''பள்ளிக்கரணைல இருக்கிற ஆசான் மெமோரியல் காலேஜ்ல பி.பி.ஏ. சேர்ந்தேன். தினமும் தி.நகர்ல இருந்து செல்லும் பஸ்ஸின் ஜன்னலோரப் பயணங்களை நினைத்தால் இப்பவும் இனிக்கும். காலேஜ் டேஸ்ல நான் கண்டெடுத்தது ஜின்ஜோஸ்வா, ராதிகா, ஆஸ்வின் தினேஷ் என்கிற பொக்கிஷமான நட்புகளை. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அனுபவத்தைக் கத்துக் கொடுத்தது இந்தக் கல்லூரி வாழ்க்கைதான். காலேஜ் டூர் போகணும்னு எல்லோருக்கும் ரொம்ப ஆசை. ஆனா, காலேஜ்ல ஏதோ ப்ராப்ளம். சரி நாம ஃப்ரெண்ட்ஸெல்லாம் சேர்ந்து ஒரு டூர் போலாம்னு முடிவு செஞ்சோம். 5 பொண்ணுங்க 17 பசங்க சேர்ந்து கேரளா போனோம்.

மெல்லிய சோடியம் லைட் வெளிச்சத்தில் கொச்சி ஹார்பர் எவ்வளவு ரம்மியமா இருக்கும் தெரியுமா! தளபதி படத்துல வர்ற அடி ராக்கம்மா பாட்டு போட்டு ஆடினோம். கொச்சிக்கு வர்ற ஃபாரின் கப்பலே எங்க ஆட்டத்தால அப்படியே சும்மா அதிர்ந்துச்சுல்ல...'' என்று கடந்த கால நட்பில் மூழ்கிப் போன நந்தினி, ''இப்பவும் கல்லூரியில் படித்து அமெரிக்காவில்





செட்டிலான தோழிகளோடு சேட்டிங் உண்டு'' கல்லூரி டைரியில் எழுதி வைத்த கவிதையொன்றைக் காண்பிக்கிறார்.

கண்ணீரோடு கட்டித் தழுவி
விடை பெற்ற நண்பிகள்
கைகுலுக்கி விடைபெற்ற
நண்பர்கள்
எங்கேனும் சந்தித்துக் கொண்டால்
எதிர்கொள்ளும் முதல் வார்த்தை
எப்படியிருக்கே என்று

''கோயமுத்தூர் பி.எஸ்.ஜி. கல்லூரியில் எம்.பி.ஏ. சீட் கிடைத்தது. அதைத் தவிர்த்துவிட்டு பெற்றோரிடம் கெஞ்சிக் கூத்தாடி ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் சேர்ந்தேன். அங்கே அறிமுகமான கதிர், இப்போது என் குடும்பத்தில் ஒருவன். ('திருதிரு துறுதுறு' படத்தின் கேமராமேன்) சினிமாவைப் பற்றி அசைபோட்டுக் கொள்ள ஒரு நல்ல நண்பன்.

அங்கே படித்துக் கொண்டிருந்தபோது குடிசை மக்களின் வாழ்க்கையைப் பற்றிய 'ஓட்டம்' குறும்படத்தை இயக்கினேன். 'ஓட்டம்' 2002 தமிழக அரசின் சிறந்த குறும்படத்துக்கான விருதைத் தட்டி வந்தது! ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் இயக்குனர் ப்ரியாவின் ஃபோன் நெம்பர் கிடைச்சது. அவரைத் தொடர்பு கொண்டு நான் செய்த குறும் படம் மற்றும் விளம்பரங்களைக் காட்டினேன். அவருக்குப் பிடித்துப் போனதால் என்னை, அவர் இயக்கிய 'கண்ட நாள் முதல்' படத்தில் உதவி இயக்குநராகச் சேர்த்துக்கொண்டார். சினிமாவைக் கற்றுக் கொள்ள ஆரம்பத்தில் திக்குமுக்காடிப் போனேன். போகப் போக சினிமா கைவசப்பட்டது.''




''சரி, இத்தனை வருட நண்பர்களின் பட்டியலில் முதலிடம் யாருக்கு?'' எனக் கேட்டால், சட்டென்று சொல்கிறார். நண்பரா இருந்து காதலராகி, கணவரான சுக்தேவ் பெயரை. 'அப்புறம்' என்றால், ''ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் இருந்து இன்று வரை எனக்கு எல்லா உதவிகளையும் செய்யும் கதிர்'' என்று கண்ணில் நட்பைக் காட்டுகிறார்.

- அ.ராஜ்குமார்

• நந்தினி

## சரி, இத்தனை வருட நண்பர்களின் பட்டியலில் முதலிடம் யாருக்கு?



★ சுஜி

'**கை** கொடுத்த தெய்வம்'. நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் 97-வது திரைப் படம். 18.07.1964 அன்று திரைக்கு வந்தது. வெளியாகி நாற்பத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. தமிழ் சினிமாவின் 'காதலுக்கு மரியாதை' போல, நட்புக்கு மரியாதை செய்த திரைப் படம் 'கை கொடுத்த தெய்வம்'. அதில் ஒரு காட்சி. சிவாஜியும் எஸ்.எஸ்.ஆரும் உயிர் நண்பர்கள். எஸ்.எஸ்.ஆரின் மனைவி கே.ஆர்.விஜயா. மூவரும் ஒரே வீட்டில்



# நட்புக்கு மரியாதை!

வசிப்பாங்க. சிவாஜியையும் கே.ஆர்.விஜயாவையும் இணைத்து அக்கம்பக்கம் கசமுசா என பேசிக் கொள்வார்கள்.

அந்தப் பேச்சு சிவாஜி காதுக்கு எட்டி விடும். பெட்டி படுக்கையை எடுத்துக் கொண்டு கிளம்புவார் சிவாஜி. தடுப்பார் எஸ்.எஸ்.ஆர். விவரம் சொல்வார் சிவாஜி. 'ஊரு உலகம் அப்படிச் சொன்னா, உன் மனசுலயும் அந்த எண்ணம் இருக்கா?'னு கேள்வி வரும். உடனே கோபப்பட்டு எஸ்.எஸ்.ஆரைப் போட்டு அடித்து விடுவார் சிவாஜி. ''நம்ம நட்பு ரொம்ப உண்மையானது. இது மத்தவங்க நட்பு மாதிரி அல்ல. ஊரு உலகம் ஆயிரம் சொல்லட்டும். உன் மனசு சுத்தமா இருந்தா, நீ எங்களோட தங்கித்தான் ஆகணும்!''னு சொல்வாரு எஸ்.எஸ்.ஆர். 'நீதான்டா என்னோட உண்மையான நண்பன்'னு எஸ்.எஸ். ஆரைக் கட்டிப்புடிச்சு அழுவாரு சிவாஜி. அப்புறம் அந்த வீட்லயே தங்கிடுவாரு.




இதுதான் அந்தக் காட்சி. ஸோ, இப்பவும் அது மாதிரி நட்புக்கு மரியாதை இருக்கா?



★ சித்ரா விஜயகுமார்

★ பொருகை பாலு

**சுஜா, திருவெறும்பூர், கல்லூரி மாணவி:**

என் கணவர், அவரோட நண்பர் அவங்க நட்பும் முக்கியம். ஒரு பெண்ணுக்கு நல்ல



* கோகிலா

பேரும் ரொம்ப முக்கியம். நான் கே.ஆர்.விஜயா இடத்துல இருந்தா, சிவாஜி அண்ணனை வேற வீட்ல தங்கறதே நல்லதுன்னு சொல்லிடுவேன்.

**சித்ரா விஜய குமார், வழக்கறிஞர்:**
நான், கே.ஆர்.விஜயா இடத்துல இருந்தா, என் கணவர்கிட்ட பக்குவமா எடுத்துச் சொல்வேன். நம்ம வீட்டை விட்டு சிவாஜி வெளியே போய்த் தங்கறதுதான் மூணு பேருக்குமே நிம்மதின்னு. சந்தேகக் கோடு சந்தோஷக் கேடு.

**முனைவர் ஆர்.கௌசல்யா, திருவானைக் காவல்:**
இந்தச் சமூகத்துக்கு நாம பயந்துதான் வாழணும். பயமில்லேன்னா வாழ்க்கை சீர்குலைஞ்சுடும். கே.ஆர்.விஜயா கேரக்டர்ல நான் இருந்தா, நட்பைத் துண்டிச்சிட்டு என் கணவரோட வேற ஊருக்கு மாற்றல் வாங்கிப் போயிடுவேன். ஒரு பெண்ணுக்குத் தன் கற்பும் குடும்ப கௌரவமும்தான் உயிர் போல.



* கௌசல்யா

**பொருநை பாலு, திருநெல்வேலி டவுன்:**
படத்தில் அனாதையா நின்னுட்டிருந்த எஸ்.எஸ். ஆருக்கு, வேலை வாங்கித் தந்து சமூகத்துல குடும்பஸ்தனா உயர்த்துபவர் சிவாஜி. அந்தக் காட்சியில எஸ்.எஸ்.ஆரா நான் இருந்தாலும், ஊரு உலகம் பேசுறதைக் கண்டுக்கவே மாட்டேன்.

**கோகிலா, பூதலூர், தஞ்சை மாவட்டம்:**
ஒரு பெண்ணுக்குத் தன் கணவரோட நண்பர், உடன் பிறவா சகோதரர் போல. நான் கே.ஆர்.விஜயாவா இருந்திருந்தா, சிவாஜியை என் வீட்லதான் தங்க வெச்சிருப்பேன்.



* சண்முகம்



* சிவாஜி சண்முகம்

**சிவாஜி சண்முகம், ஸ்ரீரங்கம்:**
இன்னைக்கு உலகம் ரொம்ப மாறிப் போச்சு சிவாஜி இடத்துல நான் இருந்திருந்தா, எஸ்.எஸ்.ஆர். என்னதான் தடுத்தாலும் நான் அந்த வீட்ல தங்கியிருக்க மாட்டேன். வேற வீடு பார்த்துப் போயிருப்பேன்.

**எஸ்.என்.சண்முகம், ரோட்டரி சங்கத் தலைவர், பண்ருட்டி:**
சினிமாவுல எஸ்.எஸ்.ஆர். செஞ்சதைத்தான் நிஜ வாழ்க்கையிலும் நான் செஞ்சிருப்பேன். எங்க மூணு பேரோட மனத் தூய்மைக்கு, எங்க மனசாட்சி மட்டும் சான்றிதழ் தந்தா போதும்.

**- இந்திரா மணாளன்**

# கடி மழை!

● **எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்**

**கண்ணை மூடித் திறப்பதற்குள் எந்த வேலையைச் செய்ய முடியும்...?**

வால்மீகி முக்கால்வாசி ராமாயணத்தையே எழுதி முடித்துவிட்டார்; கும்பகர்ணன் கண்ணை மூடித் திறப்பதற்குள்!

● **எஸ்.ராமசாமி, ஈரோடு**

**'Twinkle Twinkle Little Star... How I wonder what you are' இதற்கு இணையான Rhyme எது?**

Rhymeஐ மொழிபெயர்ப்பது Crime. இருந்தாலும் நீங்கள் கேட்டதால், குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பாவின் அடிகளைத் தொழுது அடியேன் 'கிரி.மோகனின்' சிறிய முயற்சி...

*''மினுக்குது மினுக்குது சின்னப் பூ*
*எவக்கதைப் பார்க்க பிரமிப் பூ*
*மண்ணுக்கு மேலே வெகு*
*தொலைவில்*
*விண்ணில் ஜொலிக்குது*
*வைரக்கல்''*

● **ஆர்.ரங்கராஜன், தி.நகர்**

**சகுனியா நடிக்க வாய்ப்பு கிடைத்தால் நடிப்பீர்களா?**

மாட்டேன்... என்ன பந்தயம் கட்டறீங்க...!



● **மீனா, காரைக்குடி**

**க வி தை எழுத என்ன வேண்டும்...?**

பணக்காரனாகப் பணம் வேண்டும். அறிவாளியாக அறிவு வேண்டும். கவிதை எழுத 'கவி' வேண்டும். 'கவி' என்றால் குரங்கு என்றும் ஒரு பொருள் உண்டு. தன்பாட்டுக்கு ஆடும் மனக் குரங்கை, நம் பாட்டுக்கு 'தை தை' என்று ஆடவைத்தால் 'கவி-தை' பிறக்கும்!

● **மஞ்சுதேவன், அயிரோலி**

**தங்கத்தின் தனிச் சிறப்பு..?**

பித்தாய் அலைய வைக்கும் 'பித்தலை!'

● **பா.அசோக், விருதுநகர்**

**'ரோஜா - மல்லிகை' இரண்டில் எதற்கு மதிப்பு அதிகம்?**

'காதல் பூ' ரோஜா. காதலி மனைவியாகி அவளுக்கு 'அல்வா' கொடுக்கும்போது 'காதுல பூ' மல்லிகை...!

● **மல்லிகா அன்பழகன், சென்னை**

**விழாக்களில் பேசும் போது 'ஆக்ச்சுவலா பாத்தீங்கன்னா...' என்று ஆரம்பிக்கும் வியாதி தங்களுக்கு எப்போதிலிருந்து வந்தது...?**

'ஆக்ச்சுவலா பாத்தீங்கன்னா...' அது வியாதி

## கிரேஸியைக் கேளுங்கள்

அல்ல... குணம்!

**● வாசுதேவன், அமிரோலி**

**மைக் - டெஸ்டிங் போது 1 2 3 4 என்று கூறுகிறார்களே... என்ன அர்த்தம்?**

என்னும் அளவுக்குக் கூட்டம் கம்மி என்று அர்த்தம்!

**● கே.சண்முகம், ஆதமங்கலம்புதூர்**

**எமதர்மன் பதவி உங்களுக்குக் கிடைத்தால் என்ன செய்வீர்கள்?**

வேலை உயிரை வாங்கிடுமே! அட அய்யா நீங்கள் சொன்னது போல பதவி திணிக்கப்பட்டால், எல்லோருக்கும் முதலில் இறப்பு, பிறகு முதுமை, தொடர்ந்து இளமை, மழலை என்று சுபமாக பிறப்பில் முடியும் வண்ணம் orderஐ மாற்றி ORDER போடுவேன்!

**● முத்து ஆனந்த், வேலூர்**

**மௌனம் சம்மதம்**

**அது லவ்வுக்கு செட்டாகாது**

**என்பது ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயமா?**

கீதை, பைபிள், குரான் என்று ஒவ்வொரு மதத்துக்கும் ஒரு பாஷை. சர்வமதத்தையும் இணைக்கும் சம்மதமான மொழி மௌனம்!

கேர்ள் ஃப்ரெண்ட்ஸ் இருந்தாலே ஒரு எனர்ஜி, புத்துணர்ச்சிதான் பாய்ஸ் டீமுக்கு. ஆனால், ''இந்த கேர்ள்ஸைப் புரிஞ்சுக்கவே முடியலை. ஒரே சஸ்பென்ஸ். எப்ப என்ன மூடில் அலைவாங்கன்னு கெஸ் பண்ணவே முடியலை...''ன்னு ஸ்பென்ஸர் மாடிப் படிகளில் உட்கார்ந்து அழுகிறார்கள் ஆண்கள்!

ஐந்து ஸ்டேஜ்ல அடிபட்டுப் புண்பட்ட ஒரு பாய்ஸ் டீம் தரும் டிப்ஸ் இதோ...

**ஜஸ்ட் ஃப்ரெண்ட்:** நண்பா, அவ சிரிக்கறாளேன்னு ரொம்ப சீரியஸாயிடாதே. சும்மா நீ ஒரு ஷோ பீஸ் ஐட்டம் மாதிரி! அவளுக்குத் தோணினா சிரிப்பா. நீ அவ வீட்டுக்கு ஃபோன் போட்டா ''ஹேய் நா அம்மா கூட தி.நகர் போறேன்டா. கால் மீ ஆஃப்டர் டூ டேஸ்''ன்னு இரக்கமேயில்லாம லொட்டுன்னு கட் பண்ணிடுவா. ''எப்ப வருவ ஷில்பு''ன்னு நீங்க கொஞ்சல்ஸ் விடறதுக்கு முன்னாடி, 'நன் ஆஃப் யுவர் பிஸினஸ்'னு ஞாபகமா காயப் படுத்துவா.

**நல்ல ஃப்ரெண்ட்:** தோழா, உன் நிலைமை ரிமோட் கன்ட்ரோல் மாதிரி. அவதான் தேவைக்கேற்றாற் போல் பட்டனைத் தட்டுவா. ''ஹாய் ஷில்ஸ்''ன்னு நீங்க போனில் கூவ, ''ஹேய் சரவணா, நான் பேரண்ட்ஸ் கூட வெளில போறேன். ஐ வில் கால் யூ பேக்''ன்னு கட் பண்ணிட்டு, ஞாபகமா ஒரு வாரம் கழிச்சுக் கூப்பிடுவா.

''சரவணா, அன்னைக்கு எதுக்குடா கூப்பிட்ட?''

''நத்திங் சும்மாத் தான்...''னு சொல்வீங்க.

''சரவணா, இருப் பதிக்கு பஸ் டிக்கெட் வேணும். ஹரிஹரன் நைட்ஸ¬க்கு பாஸ் கெடைக்குமா?'' போன்ற தேவைகளுக்கு உங்களை யூஸ் பண்ணிப்பா.

**வெரிகுட் ஃப்ரெண்ட்:** அவளுக்கு யாரிடமேனும் கோபம், சண்டை என்றால் உங்களிடம் ஓடி வருவாள். அவர்களைப் பற்றி புகார்ப் பட்டியல் படிப்பாள். ''யு நோ சரு, (சரவணாதான் செல்லமா...) தீபு என்னைக் கண்டாலே ஓடறான்டா. நேத்து வேறு யாரோ ஒரு கேர்ள் கூட பாத்தேன்டா...''

''யாரிந்த தீபு?''

''அதான்டா சந்தீப். என் பாய் ஃப்ரெண்ட்'' என்பாள் ஜில்லாக. நீங்கள் முகத்தில் எந்த ரியாக்ஷனும் காண்பிக்கக்

# பாய்ஸ் கிளப்ல



கூடாது. குட் ஃப்ரெண்டுக்கு அழகல்ல!

**பெஸ்ட் ஃப்ரெண்ட்:** ஆட்டோ டிரைவர் மாதிரி உங்க நிலைமை. நீங்க இல்லாம அவளால இருக்கவே முடியாது. அதுக்காக நீங்க அவ பாய் ஃப்ரண்டெல்லாம் கிடையாது. ''சரவணா சினிமா'', ''சரு காஃபி டே'', ''சரவண் சிட்டி சென்டர் மால்''.... அப்படின்னு உங்ககூட வெளியே சுத்துவா. ஹய்யோ இதுதான் காதல்னு அவகிட்டே ப்ரபோஸ் பண்ணினீங்கன்னா, ''சரவணா, உனக்கென்ன பைத்தியமா, நாம ஃப்ரெண்ட்ஸ்டா. எனக்கு பாய் ஃப்ரெண்ட் இருக்கான்னு உனக்குத்தான் தெரியுமே''ன்னு நோகடிப்பா.

**திக் ஃப்ரெண்ட்:** இப்ப நீங்க அவளுக்கு ரொம்ப ஸ்பெஷல். டாடி கம் பாய் ஃப்ரெண்ட் கம் ப்ரதர் கம் பெப்ஸி (அவனோட செல்ல நாய்) கம் எவ்ரிதிங். அவ கூடவேதான் நீங்க இருப்பீங்க. கூப்பிட்ட குரலுக்கு பெப்ஸியை விட வேகமா பாய்வீங்க. அஸைன்மென்டை முடிக்கணுமா, குமாய் ரிப்பேரா, நாய் பிஸ்கட் வாங்கணுமா... ஓடி ஓடி ஸ்மைலிங் ஃபேஸோடன் செய்வீங்க. பீச்சுக்குப் போவீங்க. சன் செட் பார்ப்பீங்க (ஏன்னா ஷில்ப்ஸ் டிமாண்ட்!)



# சாட்டிங் பாய்ண்ட்

ஆனா ஆனா... நீங்க வெறும் ஃப்ரெண்ட்தான். பாய் ஃப்ரெண்ட் இல்ல. அவ பாய் ஃப்ரெண்ட் சாஃப்ட்வேர்ல பயங்கரமா லட்சத்துல சம்பாதிக்கறான். கார், பங்களா (சூப்பர் ஸ்டாருக்குப் பக்கத்து வீட்டுக்குப் பக்கத்து வீடு)ன்னு வசதி. ஒரு நாள் குண்டைத் தூக்கி கலாப் கணக்கா வீசுவா. ''சரவண், எனக்கு நாளைக்கு எங்கேஜ்மெண்ட். வந்துருடா. நீதான் எல்லா வேலையும் கவனிக்கணும். டேய்... இவன்தான் என்னோட திக் ஃப்ரெண்ட் சரவணன்...'' அறிமுகம் ஆனதும் பாய் ஃப்ரெண்ட் கையைக் குலுக்குவான் பாருங்க, நொறுங்கிடும் கை.

**"எப்ப வருவ ஷில்பு?"**
**"நன் ஆஃப் யுவர் பிஸினஸ்"**



# கேர்ள்ஸ் எதுக்கு?

இதயம் நொறுங்கி, மணிக்கட்டும் ஒடிந்து... தேவையா இது? பாய்ஸ்! நம்ம க்ரூப்புல வேண்டாம் கேர்ள்ஸ். ஏற்கெனவே நொந்து போனவங்க சொன்னா கேட்டுக்கணும். தோழியா... என் காதலியா... யாரடி நீ பெண்ணே...?

**- லதா சேகர்**

# உன் நண்பனாய்

விவேகா கவிதைகள்

பயணங்களின்போது
எளிதாகக் கிடைத்துவிடுகிறது
நட்பு.
நட்பின் பயணம்தான் கடினமானது.

சில
நண்பன் இல்லையே என வருந்துவது
எவ்வளவு சுகமாயிருக்கிறது
ஒரு நண்பன்கூட இல்லாதவர்களின்
சோகத்துக்கு முன்னால்...

ஒரு நண்பனுக்காக
நூறு எதிரிகளைச் சம்பாதிக்கலாம்.
ஒரு நண்பனிருந்தால்
ஆயிரம் எதிரிகளைச் சமாளிக்கலாம்.

வாழ்ந்து நிறைந்த நட்புகள்
வண்ணத்துப் பூச்சிகளாகிச்
சிறகடிக்கின்றன

மரங்கள் தமது
உச்ச அழகைப் பூக்களில்
வைக்கின்றன.
மனிதர்கள்
நட்பில்..!

ஆடியம்
கிச்சு கிச்சு தாம்பாளம்
நிலாக்கும்பல்
கண்ணாமூச்சி
ஆட்டங்கள் துருப்பிடித்துக்
கிடக்கின்றன
கிராமத் தெருக்களின் ஓரம்
நம் நட்பின் கைகள் படாமல்.

எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு
எதிர்ப்படும் நண்பா
என்னவாய் இருக்கிறாய் எனக் கேட்டுவிடாதே
உன் நண்பனாய் இருக்கிறேன்.



இருக்கிறேன்

# மிஸ்டர் & மிஸஸ் மேல்மாடி

## சீக்ரெட் அஃப் ப்ரெய்ன்

என்னுடைய பேஷன்ட் திருமதி ருக்மிணி மிக அழகாகக் கதாகாலட்சேபம் செய்பவர். நோயையும் மீறி எப்போதும் தம்மையும் தம்மைச் சுற்றி இருப்பவர்களையும் கலகலப்பாக வைத்திருப்பவர்.

அன்று மிகச் சோர்வுடன் காணப்பட்டார். ''மருந்தெல்லாம் விடாமல் சாப்பிடறீங்கதானே?'' விசாரித்தேன். ''அதெல்லாம் ஒன்றும் பிரச்னை இல்லை டாக்டர். ஆனால்...'' என்று இழுத்தார்.

''மறைக்காமல் சொல்லுங்க'' என்றேன்.

''லவ் பண்ணினவளைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு பையன் சொன்னான் அதுக்கு ஒத்துக் கொண்டு ரொம்ப கிராண்டா போன வருஷம்தான் கல்யாணம் பண்ணி வெச்சேன்.

அதுக்குள்ள டைவர்ஸுக்கு ரெடியாயிட்டாங்க இரண்டு பேரும். இப்பதான் வியாதியின் தீவிரம் கொறைஞ்சு வருதுன்னு சந்தோஷப்பட்டேன். ஆனா இதுபோன்ற பிரச்னைகளால், போன வியாதி இன்னும் ஜாஸ்தியாயிடுச்சு'' - முடிக்கும்போது அழுதே விட்டார்.

இவருக்கு மட்டுமல்ல. இன்று முக்கால்வாசி சீனியர் சிட்டிஸன்களின் பல்வேறு மன உளைச்சல் மற்றும் வியாதிகளுக்கு, பிள்ளைகளின் திருமண வாழ்க்கை திருப்திகரமானதாக இல்லாமல் இருப்பதே காரணமாகும்.

இதுபோன்ற கேஸ்களை தினமும் சந்திக்கிறேன். ஏன்?

நம் அப்பா, தாத்தா காலங்களிலெல்லாம் டைவர்ஸ் என்ற வார்த்தையைக் கேட்டதே இல்லையே! காரணம் என்ன



8

டாக்டர் ஏ.வி. ஸ்ரீனிவாசன்

கணவன் கறுப்பாக இருந்து மனைவி வெளுப்பாக இருந்து விட்டால் அங்கு சண்டைகளும் சந்தேகங்களும் வலுக்கும். இது அழகு சார்ந்த ஒப்பீடு. 'நீயா, நானா?' என்பது பெருமை சார்ந்த ஒப்பீடு.

பூமியில் விழும் ஒரு குழந்தையை ஒரு வீட்டிலிருக்கும் அனைவரும், பெற்றோர் உட்பட, ஓடி ஓடிக் கவனித்துக் கொள்கிறோம். அதன் ஒரு சிணுங்கலைக் கேட்கும்போதே அதற்குத் தேவையானதைக் கொடுத்து விடுகிறோம். அதற்கு தன்னைத் தவிர எதுவும் தெரியாது. ''நம்



# கம்பேரிசன் கலவரம்!

மைச் சுற்றி இருப்பவர்களெல்லாம் வேலைக்காரர்கள்தான். நமக்கு வேண்டியதெல்லாம் இவர்கள் கொடுத்து விடுவார்கள். அழுது என்ன வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளலாம்'' என்ற எண்ணத்துடனேதான் வளரும்.

ஒரு குழந்தைக்கு எப்படி நம் அன்பைக் கொடுக்கிறோம் என்பதிலேயே மொத்தக் குடும்பமும் திளைத்து விடுகிறது. அதே குழந்தைக்குப் பிறரிடம் அன்பை எப்படிப் பகிர்ந்து கொள்வது என்று பாடம் எடுக்கிறோமா, சொல்லித் தருகிறோமா?

முன்பெல்லாம் ஒரு குடும்பத்தில் நான்கைந்து குழந்தைகள் இருக்கும்.

வாக இருக்கும்?

எவ்வளவோ இருந்தாலும் மிக முக்கியமாகச் சில காரணங்களைச் சொல்லலாம்.

மனத்தை அகப்புறமோ புறப்புறமோ ஒருமுகப்படுத்தி இருத்தலின் ஒப்பீடு- உதாரணத்துக்கு மனைவி எல்லோருடனும் நன்கு கலந்து பழகும் கலகலப்பான குணமுள்ளவராகவும் கணவன் மிக அமைதியாகவும் இருப்பது.

'நீ அதிகம் படிச்சிருக்க. நான் கம்மியா படிச்சிருக்கேன்' என்பது கல்வி சார்ந்த ஒப்பீடு.

ஒன்றுக்கொன்று சண்டை போட்டாலும் அங்கு அன்புக்குப் பஞ்சம் இருக்காது. விட்டுக் கொடுத்தல், அன்பைப் பகிர்தல் என்று அங்கே கற்றுக்கொண்டு விடுவார்கள்.

ஆனால், நியூக்ளியர் ஃபேமிலிகள் இருக்கும் இன்றைய நிலையில் இதனைச் சொல்லித்தான் கொடுக்க வேண்டும். புரிந்து கொள்ளுதலும் விட்டுக் கொடுத்தலும் இல்லாத நிலையில் டைவர்ஸ்"களும் பெருகி விட்டன.

''எனக்கு எங்க வீட்டுல நான் கேக்கறதுக்கு முன்னாடியே எல்லாம் கிடைச்சுடும். இங்க ஒவ்வொண்ணுக்கும் உன் பின்னாடி கையேந்திட்டு இருக்க முடியாது'' என்று ஆரம்பித்து வார்த்தை தடித்து விடும்.

உலகம் எங்கும் இப்பிரச்னைகள் உண்டு. மேற்கத்திய நாடுகளிலெல்லாம் இது சர்வ சாதாரணம். இங்கும் அப்படி ஆகிவிடக் கூடாது.

டைவர்ஸ் முடிவெடுக்கும் முன்பு ஒவ்வொரு தம்பதியும் சண்டை போட்டுக் கொள்வார்கள். அது எப்படி இருக்கும்? ஆண் என்ன மாதிரியான கேள்விகளைக் கேட்பான்? பெண் எப்படி சண்டை போடுவாள்? அவர்களது உணர்வுகள் எப்படி வித்தியாசப்படும்?

கிட்டத்தட்ட உலகம் முழுக்க எடுத்த கருத்துக் கணிப்பில் நிறம், மொழி, இனம் பாகுபாடின்றி ஒரு ஆண் மற்றும் பெண் சண்டை போட்டுக் கொள்ளும்போது பயன்படுத்தும் வார்த்தைகளை, கேள்விகளைப் பட்டியலிட்டிருக்கிறார்கள் நரம்பியல் வல்லுநர்கள். அவை...?

(அலசுவோம்)

எழுத்தாக்கம் : **லக்ஷ்மி மோகன்**

நம் உடலின் வலது பக்கத்தை இயக்க இடது அறைக்கோளமும், இடது பக்கத்தை இயக்க வலது அறைக்கோளமும் இயங்க வேண்டும். இரண்டும் தனித்தனியே இயங்குமா? அப்படி இல்லை. இரண்டும் ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும். சாதாரணமாக எல்லோருக்கும் இடது அறைக்கோளத்தின் ஆதிக்கம் சற்று அதிகமாக இருக்கும். அதனால்தான் பொதுவாக எல்லாவற்றுக்கும் வலப்பக்கத்தை அதிகம் உபயோகப்படுத்துகிறோம். சிலருக்கு இடக்கைப் பழக்கம் இருக்கும். அவர்களுக்கு வலது அறைக்கோளத்தின் ஆதிக்கம் அதிகம் இருப்பதே காரணம்.



**''ஒவ்வொண்ணுக்கும் உன் பின்னாடி கையேந்திட்டு இருக்க முடியாது''**



# ஃப்ரெண்ட்ஷிப்பின் ரோல்மாடல்!

ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்னு சொல்வாங்க. நாங்க 200 சோறைப் பதம் பாத்தோம். அட! ஆமாங்க... 200 காலேஜ் யூத்கிட்ட நட்பின் முகவரியைத் தேடத் தொடங்கினோம். ஃப்ரெண்ட்ஷிப்புக்கு ரோல் மாடல் யாரு என்ற ஒற்றைக் கேள்வியைத் தூக்கிப் போட்டோம். நமக்குக் கிடைத்த பதில் ஆச்சரியமானது.

''மூன்றாவது இடத்தில்.... அரசியல் சார்ந்த நட்பு ஜோடி: கருணாநிதி - எம்.ஜி.ஆர். இரண்டாவது இடத்தில் சினிமா தொழில் சார்ந்த நட்பு ஜோடி: கமல் - ரஜினி. இதிலெல்லாம் ஏதாவதொரு கிவ் அண்ட் டேக் இருக்கும். ஆனா, நட்புக்கு ரோல் மாடல்னு பார்த்தா முதலிடத்தில் ரஜினி - ராஜ்பகதூர்தான்'' என்று பதில் வந்தது. அப்படியென்ன விசேஷம் இதுல...? ''ரஜினி கண்டக்டராக வேலை பார்த்தபோது அந்தப் பேருந்துல வேலை பார்த்த டிரைவர் ராஜ்பகதூர்தான்.

ரஜினியின் திறமையைக் கண்டுபிடிச்சு பணத்தைக் கொடுத்து சென்னைக்கு ரஜினியை அனுப்பினாரு. அவர் சூப்பர் ஸ்டாரா வளர்ந்ததும் 'நான்தான் இதுக்குக் காரணம்'னு பந்தா பண்ணிக்கல; அவர்கிட்டப் போய் ஈஷிக்கல.

ஆனா, எப்பவெல்லாம் மனக்கஷ்டம் வருதோ அப்பவெல்லாம் ரஜினி தேடி ஓடிப்போய் தேத்திக்கிற இடம் ராஜ்பகதூர்தானாம். பிரதிபலன் பார்க்காத, 'சீன்' போடாத, விளம்பரம் பண்ணிக்காத, இயல்பான, ஏற்றத்தாழ்வு பார்க்காத இவங்க நட்புதான் விசேஷம்னு தோணுது'' என்றனர். ''அவரு எப்படியிருப்பாரு?''ன்னு கேட்டோம். ''ரஜினிகூட ஒரு படத்துல நடிக்க 'ரிப்பீட்டு' என்று சொல்ல வெச்சாரே! அவருதாங்க'' என்றனர்.

நாமும் அந்த ரோல் மாடலை நெட்ல தேடினோம். அட! சூப்பரப்பு...! இவரா அந்த ரோல் மாடல்? புள்ளைங்க தெளிவாத்தான் இருக்குதுங்க...



* ராஜ்பகதூருடன் ரஜினி...

- ஆர்.பாலா

சென்னை 35
28.09.1978

என் இதய நண்பா,

எத்தனையோ முறை சொன்னதுதான், இருந்தாலும் மீண்டும் சொல்கிறேன். என்னை நேசிக்க ஆயிரம் பேர் இருக்கலாம். நான் நேசிக்கவும் ஆயிரம் பேர் இருக்கலாம். ஆனால் உன் ஒருவனிடமே மீண்டும், மீண்டும் அடிமையாகிறேன். உன் ஒருவனால்தான் மிக அதிகமாகக் கவரப்படுகிறேன். யாது காரணம் என்று ஆராயவில்லை. ஆராய்ந்தால் விடையும் கிடைக்காது.

நீ எழுதி அனுப்ப இருக்கும் கதைகளுக்குப் பிரதி எடுக்க நான் தயாராயிருப்பது மட்டுமல்ல. அவற்றுக்கு அங்கங்கே பூச்சு வேலை செய்யவும் விரும்புகிறேன். என்னிடம் குறைந்திருப்பதெல்லாம், மறைந்திருப்பதெல்லாமென்றே சொல்லலாம். flow of writing அது உன்னிடம் நிறைந்துள்ளது - ஆனால் இதுவரை வெற்றிகரமாகப் பயன்படுத்தப் படாமலே!

நான் முன்பே குறிப்பிட்டதையும் நினைவில் நிறுத்து. நீ முக்கியத்துவம் அளிக்க வேண்டியதெல்லாம் வங்கித் தேர்வுகளுக்கே! இடையில் அயர்ச்சி ஏற்படுகையில், இளைப்பாற விரும்பும் பொழுது மட்டும் கதைகளுக்கும், கடிதங்களுக்கும் நேரம் ஒதுக்கு.

என்றும் உன்,
சுரேஷ்.

பெருந்துறை
12.10.1978

என் இனிய நண்பனுக்கு,

மாருதிக்கு அவன் வலிமை அவனுக்கே தெரியாமல், அவனுள் உறைந்திருந்தபோது அதனை வெளிப்படுத்தியது ஜாம்பவான் தான்! எனது கைத்திறமையை - எனது எழுத்தின் பிரவாகத்தை - flow of writing- நீ இதுநாள் வரை சொல்லி வந்துங்கூட அதை நான் மதிக்காமல் இருக்கிறேன் என



நீ எண்ணலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் கடிதம் எழுதும் வேளையில் நான் கையாளும் நடையை, கதை எழுதும் நேரத்தில் நினைத்தாலும் வருவதில்லை.

முன்பு நான் எழுதியிருக்கும் கதையை இப்போது படித்தால் சிரிப்பு வருகிறது. எனது நடை இவ்வளவு மோசமாகவா இருந்திருக்கிறது என எண்ணுகிறேன். அந்த ஒரு எண்ணமே இன்னொரு விஷயத்தையும் தெளிவாக்கி விடுகிறது. இப்போது நான் முன்னேறியிருப்பதை அது சொல்லாமல் சொல்கிறது. நாளை நான் இதைப் படித்தால் சிறுபிள்ளைத்தனமாகத் தோன்றாது என எவ்வாறு சொல்லுவது?

... நமது மனதளவில் நமக்கே ஒரு நிறைவு இருந்தாலல்லவோ அக்கதையைத் துணிவுடன் வெளியே அனுப்பலாம்?

என்றும் உன்,
பாலகிருஷ்ணன்.




சென்னை 20
30.11.2009

எங்களது இனிய நண்பர்களுக்கு,

1977 முதல் 1980 வரை, வங்கிப் பணிகளில் சென்னையிலும், பெருந்துறையிலுமாக நாங்கள் தனித்தனியே இயங்கிக் கொண்டிருந்த போது, கடிதங்கள்தான் எங்கள் தூதுவர்கள். மாதிரிக்குத் தந்ததே முகப்பில் நீங்கள் கண்ட கடிதச் கருக்கங்கள்!

இணைந்து எழுதத் துவங்கி, முப்பது ஆண்டுகளுக்கு மேல் கடந்து விட்டன. இன்னமும் எங்களது நட்பு பற்றியும், எழுத்து பற்றியும் உங்கள் இதயங்களில் பல கேள்விகள் தளும்புவதைப் புன்னகையுடன் கவனிக்கிறோம்.

'சேர்ந்தே எழுதுவதில் நீண்ட காலமாக எப்படி நீடிக்கிறீர்கள்?' என்பதே பெரும்பாலோரின் வியப்பு.

புதுமை செய்யவோ, புகழ் வெளிச்சம் தேடியோ, இணைந்து எழுதவில்லை. முதலில் நண்பர்களாக இணைந்தோம். எழுத்தால்

# ...நான் பாதி!

வெளிப்படுத்திக் கொள்ளும் ஆர்வம் இருவருக்கும் இருந்தது.

இந்நிலையில், 1976-இல், கல்கியில் ஒரு மர்மச் சிறுகதைப் போட்டி அறிவிப்பு வெளியானது. எங்கள் இருவருக்குமே, போட்டியில் கலந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம். 'உனக்கு நான் போட்டியாகவும், எனக்கு நீ போட்டியாகவும் மோதுவதா? தேவையில்லை, இருவரும் இணைந்து ஒரே புனைப்பெயரில் எழுதுவோம்' என்று முடிவு செய்தோம். 'சுபா' பிறந்தது. 'சுபா' எழுதிய 'விசித்திர உறவுகள்' என்னும் அந்த முதல் சிறுகதை, போட்டியில் மூன்றாவது பரிசை வென்றது.

கல்கி இதழால் இணைந்தவர்கள், இன்று கல்கி மூலம் உங்களுடன் பேசுகிறோம்.

'எழுத்தாளர் வளர வளர அவரது தனிப்பட்ட ஆளுமை வளருமே? தனது சிந்தனை வழியைத் தனக்கு மட்டுமேயான இடமாகப் பொத்தி வைப்பதே எழுத்தாளர் இயல்பாயிற்றே? உங்களால் எப்படி அதைப் பகிர்ந்து கொள்ள முடிகிறது?' என எங்களிடம் கேட்போர் உண்டு.

குறுகலான தனித் தனித் தெருக்களைச் சொந்தம் கொண்டாடுவதைவிட, இணைந்து எங்களுக்கான தனி வழியாக, இரண்டு மடங்கு அகலமுள்ள ராஜ பாட்டையை அனுபவிப்பது சுகமாக இருக்கிறது.

ஒருவருக்கு உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து எழுதப் பிடிக்கும். மற்றொருவருக்குச் சம்பவங்களைக் கோர்த்து சுவாரஸ்யமாக எழுதப் பிடிக்கும். இந்த இரு சிந்தனை வழிகளும் இணைகையில், எங்கள் கதைகளுக்குப் புதிதாக ஒரு பரிமாணம் கிடைக்கிறது.

'அதற்காக இரு படைப்பாளிகள் ஒரே சொல்லை ஏற்பது எப்போதும் எப்படி சாத்தியம்?' என்று விடாமல் கேள்வியால் எங்களை விரட்டுவோரும் நண்பர்கள் தான்!

எங்களில் சுரேஷுக்கு மட்டுமே எழுதத் தெரியும் அல்லது பாலாவுக்கு மட்டுமே எழுதத் தெரியும் என்று இருந்தால்தானே



பிரச்னை? இருவராலுமே எழுத இயலும் என்கையில், ஒருவர் சொல்லுக்கு அடுத்தவரால் மாற்றுச் சொல்லை எளிதில் அளிக்க முடிகிறது. அந்தச் சொல் பற்றி எழுதியவருக்கும், மாற்றியவருக்கும் உடன்பாடு ஏற்படாமல் போனால், அது ஓர் ஆரோக்கியமான விவாதமாக மலரும். இறுதி வரை இருவருக்கும் சம்மதமான ஒரு சொல் கிடைக்காவிட்டால், அந்த வாக்கியத்தையே துறந்துவிட்டால் போயிற்று! இதுவரை அதற்கு அவசியமே ஏற்படவில்லை.




பொதுவாகக் கதைகளுக்குத் தலைப்புச் சூட்டும்போதுதான் சொல் பற்றிய சூடான விவாதம் எழும். அப்படி விவாதித்துத் தேர்ந்தெடுத்த சில சொற்கள் எங்களுக்குப் பெரும் அங்கீகாரம் பெற்றுத் தந்திருக்கின்றன.

கல்கியில் 'பிரளயம்' என்ற தலைப்புச் சொல் சிறுகதைப் போட்டியில் முதற் பரிசை வென்றது. விகடனில் 'கோழிக் குஞ்சு' முதல் பரிசை வென்றிருக்கிறது. இன்னும் எத்தனையோ சிறுகதைத் தலைப்புகள் எங்கள் விவாதத்தில் கிடைத்த முத்துக்கள்தாம்.

'கற்பனைக் கதையைச் சேர்ந்து படைக்கிறீர்கள். சரி. அதெப்படி கட்டுரைகள், ஆன்மிகம், ஜக்கி வாசுதேவ் சிந்தனைகளின் எழுத்தாக்கம் என்று எல்லாவற்றையும் இணைந்து எழுத முடிகிறது?' என்றொரு கேள்வியை அண்மைக் காலமாகச் சந்திக்கிறோம்.

சுரேஷுக்குப் பிடித்த எல்லாமே பாலாவுக்குப் பிடித்தவை என்றோ, பாலாவுக்குப் பிடித்த எல்லாமே சுரேஷுக்குப் பிடித்தவை என்றோ கிடையாது. உணவு முறைகளில் ஆகட்டும், உடைகள் அணியும் விஷயத்திலாகட்டும், எவ்வளவோ வேறுபாடுகள் இருக்கின்றன. ஆனால் எழுத்தில் இருவருக்கும் ஒத்த ரசனை இருப்பதால்தானே இணைந்தோம்?

பொதுவான ஒரு நடை அமைந்திருக்கும்போது, ஆன்மிகமானாலும், சுற்றுலா பற்றியானாலும், இரு வெவ்வேறு பரிமாணங்களில் கிடைக்கும் நேரடி அனுபவங்கள் எங்கள் கட்டுரைக்கு அழுத்தம் சேர்க்கின்றன.

'திருமணம் உங்கள் எழுத்தை, வாழ்க்கையை பாதிக்கவில்லையா?' என்று கேட்கிறார்கள்!

பிரம்மச்சாரிகளாக இருந்தபோது கிடைத்த அனுபவங்களை வைத்து எழுதிய கதைகளைவிட, திருமணமான பிறகு. அந்த உறவுகளின் மூலம் கிடைத்த அனுபவங்கள், உணர்வுகள் ஆகியவை எங்களுடைய எழுத்தை ஆரோக்கியமாகப் பாதித்திருக்கின்றன.

எங்களுக்கு வந்த மனைவியர், எங்களை நண்பர்களாகவே பார்த்தார்கள். சுபாவாகவே ஏற்றார்கள். சொல்லப் போனால் எங்கள் நட்பு, அவர்களிடையே நட்பு எளிதாகப் பூக்கக் காரணமானது.

இன்றைக்கு எங்கள் இருவரது குடியிருப்புகளும் எதிரெதிரே அமைந்திருக்

கின்றன. இரு கதவுகளையும் திறந்து விட்டால், பொதுவான ஒரு பெரிய வீடாக மாறிவிடும்! இந்தப் பகுதியில் குழந்தைகளைக் காணவில்லை என்றால் அந்தப் பகுதியில் தேடுவதும், அங்கு இல்லையெனில் இங்கு தேடுவதும் இயல்பாக நடப்பவை.

இவ்வளவு ஆழமான நட்பு, அபத்தமான ஒரு குடும்பச் சூழ்நிலையால், கலைந்திருந்தாலோ, சிதைபட்டிருந்தாலோ, காயப்பட்டிருந்தாலோ மிகப் பெரிய வலியாக இருந்திருக்கும். அப்படி எந்த விபத்தும் நேராமல் இருக்கிறதென்றால், நாங்கள் கொடுப்பினை உள்ளவர்கள். தெய்வத்தின் கருணை அருள் பெற்றவர்கள்.

ஒருமுறை திருச்சியில் ஒரு வாசகர் சந்திப்பில் கலந்து கொண்டோம். ஒரு வாசக நண்பருக்கு சுரேஷ் - பாலா தனியாக எழுதினால் எப்படி இருக்கும் என்ற கேள்வி மிகவும் தலையைக் குடைந்தது. நாங்கள் பிரிந்தால் என்ன ஆகும் என்று தெரிந்துகொள்ள ஒரே கேள்வியை விதம் விதமாக அமைத்து வீசினார். எந்தப் பதிலிலும் அவர் சமாதானமாகவில்லை.

'இருவரில் ஒருவர் இறந்து விட்டால்?' என்று கேட்கு மளவு போனார்.

நாங்கள் சொன்னோம்: 'நாங்கள் என்ன பதில் சொன்னாலும் பொய்யாகப் புனைந்து சொல்வது போல்தான் இருக்கும். உங்களுக்கு எந்தப் பதில் திருப்தி அளிக்குமோ அதையே எங்களுடைய பதிலாக எடுத்துக் கொள்ளுங்கள்.'

நட்புடன் அணுகினால், எல்லாம் சாத்தியம். இயக்குனர் கே.வி.ஆனந்த் ஆழ்ந்த கதை ஞானம் உள்ளவர். வித்தியாசமான கதையமைப்பை யோசிக்கத் தெரிந்தவர். ஆழமாகப் பேசக் கூடியவர். அவருடன் அமர்ந்து கதை பேசுகையில், இரண்டு பேரோடு நில்லாமல், மூன்று பேராக இணைந்துதான் உருவாக்குகிறோம். அப்படி உருவானவைதான், 'கனாக் கண்டேன்', 'அயன்' திரைப் படங்கள். அடுத்தடுத்து வெளிவர இருக்கும் திரைப்படங்கள்.

நண்பர்களாக இருக்கிறோம். கிடைத்ததைச் சேர்ந்து அனுபவிக்கிறோம். இதிலிருந்து விடுபட வேண்டும் என்று நாங்கள் எண்ணியதே இல்லை. இதை இயல்பாகப் பார்க்க முடியாமல், ஏன் சிலர் கொண்டாடுகிறார்கள்? ஏன் சிலர் பிரிவையே மையப்படுத்திக் கேள்வி கேட்கிறார்கள்?

அவர்களுடைய அறியாமையைப் பார்த்தால் சிரிப்புதான் வருகிறது.

சேர்ந்து இருந்துதான் பாருங்களேன். அதன் ஆனந்தத்தை நீங்களும் ருசிக்கலாமே?

**மிக்க நட்புடன்,**
**சுபா**

படங்கள் : **ஸ்ரீஹரி**



● மல்லிகா அன்பழகன், சென்னை-78★
? கூவம் நதியைச் சுத்தப்படுத்த மு.க.ஸ்டாலின் சிங்கப்பூர் சென்றுதான் ஆலோசனை பெறவேண்டுமா?
! சிங்கப்பூர் நதி சுத்திகரிக்கப்பட்டதென்பது உலக சாதனை என்பதால் துணை முதல்வர் தம் பயணத்தில் ஏராளமாகத் தெரிந்து கொள்ள முடியும். அதைப் பயன்படுத்துவாரா அல்லது 'சிங்காரச் சென்னை' மாதிரி இதுவும் காகிதத் திட்டமாகவே இருந்துவிடுமா என்பதில்தான் இருக்கிறது பயணத்தின் பயன்.


★ எச்சரிக்கும் அறிவுரை

● எஸ்.உஷா சுதர்ஷன், திருச்செங்கோடு.
? கரும்பு விவகாரத்தில் மத்திய அரசின் செயல்பாடு சரியா?
! சரியில்லை என்பதை உணர்ந்து வாபஸ் வாங்கியது சரி!

# சாஹித்ய அகாடமி விருதை சாம்ஸங் தருமாமே?

● புதுவை கிருஷ்ணன், புதுச்சேரி.
? ஓர் அரசியல் ஜோக் ப்ளீஸ்...?
! உங்களுடைய அஞ்சலட்டையில் கேட்டுள்ள முதல் கேள்விதான்!
(கிருஷ்ணனின் முதல் கேள்வி: தமிழ் நாட்டில் காங்கிரஸ் கட்சியில் எந்த கோஷ்டியும் கிடையாது என்று தங்கபாலு கூறியிருப்பது பற்றி...?)


★ தொலைந்த நோக்கு!

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்.
? பள்ளிகளில் தமிழ்ப்பாட வகுப்பு எடுக்கும்போது பிற மொழிச் சொற்களைப் பயன்படுத்தக்கூடாது என்று பள்ளிக் கல்வி இயக்குநர் பெருமாள்சாமி உத்தரவிட்டிருப்பது பற்றி...?
! நடைமுறைக்கு ஒவ்வாதது. தெரிந்ததைக் கொண்டு தெரியாததைக் கற்றுத் தருவது உலகெங்கிலும் ஏற்கப்பட்ட வழிமுறை. சரியாகக் கற்றுத் தந்து, தமிழ்ப்பற்றை ஊட்டுவதே முக்கியம்.

● பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி
? நாடாளுமன்றக் கூட்டத்தை ஆண்டுக்கு நூறு நாட்கள் நடத்துவதைக் கட்டாயமாக்க, சட்டம் கொண்டுவர வேண்டும்

**நீங்கள் கேட்டவை-தராசு**

என்று சீதாராம் யெச்சூரி கூறியுள்ளது பற்றி...?

! வருடம் 365 நாட்களும் நடத்த சட்டம் நிறைவேற்றலாம். ஆனால், உருப்படியான விவாதங்கள் நடந்தால்தானே! குளிர் காலக் கூட்டத் தொடர் தொடங்கியதுமே கலாட்டா, இரண்டு நாள் ஒத்திவைப்பு...! குளிர்விட்டுப் போச்சு போங்க!



● சோக ஜோக்!

போவது யாருக்குத் தெரியும் என்று ராகுல் காந்தி கூறியுள்ளாரே?

! அச்சச்சோ! அப்புறம் காங்கிரஸ் என்ன சொல்லி வோட்டு கேட்குமாம்?

● **பேரலைகொண்டான், கருப்பம்புலம்.**

**? உலகின் டாப் நூறு பல்கலைக்கழகங்களில் இந்தியாவுக்கு ஒரு இடம் கூட இல்லையாமே?**

! ஆதி பல்கலையான நாலந்தா தோன்றித் தழைத்த தேசத்துக்கு வந்த நலிவு! அடுத்தடுத்து வந்த கல்வி அமைச்சர்களுக்குத் தலைகுனிவு.

● **அ.ஷண்முகசுந்தரம், பெங்களூரு.**

**? 'வந்தே மாதரம்' சம்பந்தமாக இஸ்லாமியர்களுக்கு மனத்தடை இருப்பதால், 'வணங்குகிறேன்' என்ற சொல்லை 'நேசிக்கிறேன்' என்றோ 'மதித்துப் போற்றுகிறேன்' என்றோ மாற்றிப் பாட வைக்கலாமே?**

! அப்படியெல்லாம் நம் சௌகரியத்துக்குப் பாடலின் வார்த்தையை மாற்றுவது கவிஞரை அவமதிப்பதாகும். இஸ்லாமிய மதத் தலைவர்களிடையிலேயே பாடலைப் பாடுவது/கூடாது என்பது குறித்து கருத்து மாறுபாடு உள்ளது. விரும்புவோர் பாடட்டும் என்று வற்புறுத்தாமல் விட்டுவிடுவது தேசநலனுக்கு உகந்தது.

● பயண பயன்..?

● **கே.ஏ.நமசிவாயம், பெங்களூரு.**

**? 'ஆலயமே இல்லாத ஆண்டவனே!', 'இந்திய தேசத்தின் விடிவெள்ளியே!' என்றெல்லாம் கார்த்தி சிதம்பரத்துக்குப் பிறந்த நாள் வாழ்த்து கூறி விளம்பரம் செய்துள்ளதைப் பார்த்தீர்களா?**

! இத்தகைய அரசியல் அடிவருடிகளைக் கட்டுப்படுத்தித் திருத்த இயலாத கார்த்தியும் சிதம்பரமும் எப்படி விடிவெள்ளிகளாக இருக்க முடியும்? சராசரி அரசியல் கரும்புள்ளிகளாகத்தான் விளங்க முடியும்.

● **என்.காளிதாஸ், சிதம்பரம்.**

**? வருங்காலப் பிரதமராகத் தம்மை நினைக்க வேண்டாம்; நாளை நடக்கப்**



● விபரீத வாழ்த்து!

● **வே.ந.கதிர்வேல், வேலூர்-6.**

**? மாவோயிஸ்டுகளின் போராட்ட வழிமுறை தவறாக இருக்கலாம்; ஆனால், போராட்டத்தின் காரணங்கள் நியாயமானவை என்கிறாரே டாக்டர் ராமதாஸ்?**

! அப்பாடி! இப்போதாவது வன்முறை வழி தவறு என்று ஏற்கிறாரே... விடுதலைப் புலிகளை ஆதரித்தபோது அதைக்கூட அவர்

ஏற்கவில்லை!

● சராஜ.முரளி,
கள்ளக்குறிச்சி ❑

? மத்திய அரசு வழங்கி வந்த சாஹித்ய அகாடமி விருது இனி கொரிய நிறுவனமான சாம்சங் மூலம் வழங்கப்பட உள்ளதாமே... இது நியாயமா?

! அநியாயம் மட்டுமல்ல; அவமானமும் கூட! கோடானு கோடிகளை வீண் செலவு செய்யும் அரசு, இலக்கியம் கலை சிந்தனைக்குச் சில லட்சங்கள் செலவிடத் தயங்கி ஸ்பான்ஸர்ஷிப் முறையைப் புகுத்தினால் அது சாஹித்ய அகாடமியின் சவப்பெட்டியில் அறையப்படும் கடைசி ஆணியாகவே இருக்கும். கலையைக் கொண்டாடாத நாடும் கடைத்தேறாது!



✸ போகாத ஊருக்கு...

● எஸ்.பக்கிரிசாமி,
திருவாரூர்.

? பாகிஸ்தான் மண்ணில் தீவிரவாதத்தை முறியடிக்க அமெரிக்க உளவு நிறுவனம் பாகிஸ்தானின் உளவுத் துறைக்கு வழங்கிய 70 ஆயிரம் கோடி ரூபாயைக் கொண்டு, அல்கைதா தீவிரவாதத்தைத் தான் பாக். வளர்த்தது என்பது தெரிய வந்த பிறகாவது அமெரிக்கா திருந்துமா?

! திருந்தலையே! மேலும் கோடிக்கணக்கான டாலர்களையும் ராணுவத் தளவாடங்களையும் அள்ளிக் கொடுத்தபடிதானே இருக்கிறது. நாம்தான் சதா விழிப்புணர்ச்சியுடன் இருக்கவேண்டும்.

❑ ரூ.150 பரிசு பெறுபவர்:
சராஜ.முரளி, கள்ளக்குறிச்சி

★ ரூ.75 பரிசு பெறுபவர்:
மல்லிகா அன்பழகன்,
சென்னை-78.

● அம்பூரணி ச.நாராயணன்,
பாளையங்கோட்டை.

? தி.மு.க. - காங்கிரஸ் கூட்டு என்றைக்கும் நிலையானது என்று முதல்வர் தெரிவித்துள்ளாரே?

! அவர் தில்லி தலைமையைக் கருத்தில்கொண்டு பாதுகாப்பு உணர்வுடன் பேசுகிறார். தமிழக காங்கிரஸ் தலைமையின் அதிருப்தி அவரைப் பாதிக்காது. அதனால் அவரது கருத்தில் தொலைநோக்கு இல்லை.

✸ நாளைய கவலை..!



● பவானி கிருஷ்ணா, பெங்களூரு.

? கவிதைகளில் கற்பனையான பொய்கள் அதிகமாக இருக்கும். வைரமுத்துவோ, பொய்களைக் கவிதைகளாக எழுத வேண்டாம் என்கிறாரே?

! 'கவிதைக்குப் பொய் அழகு' என்று எழுதிய போது கற்பனையின் வளத்தை, சுகத்தைச் சிலாகித்தவர்தான் வைரமுத்து என்றபோதும், பொய்யையே கவிதையாக்கி ஆன்மாவைத் தொலைத்துவிடாதே என்று எச்சரிக்கிறார்! ○



பஞ்சாட்சரம் செல்வராஜன்

**எ**ன்னோட பேரு பஞ்சாட்சரம் செல்வராஜன். நானொரு டாக்டர். சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்பு ஐம்பது வயது மதிக்கத்தக்க ஒருவர் காய்ச்சல் என்று என்னிடம் வந்தார்.

என் மேசை மீதிருந்த ஓர் ஆங்கில நாவலைச் சுட்டிக்காட்டி, ''புத்தகம் படிப்பதுண்டா?'' என்றார்.

நிறைய படிப்பதாக பெருமைப்பட்டுக் கொண்டேன்.

'' 'இர்விங் வாலெஸ்'... ரொம்ப நல்லா இருக்கும். ஒரு விஷயத்தை எடுத்துக்கிட்டா முழுக்க முழுக்க ஆராய்ச்சி பண்ணித்தான் எழுதுவார். நிறைய தெரிஞ்சுக்கலாம் அவர் புக்லேருந்து.''

கொதிக்கும் காய்ச்சலிலும் குளிர்ச்சியாகச் சிரித்த அவர், ''ஒரு நோயைப் பற்றி டாக்டருக்கு நிறைய தெரியும். அதை அப்படியே எழுதினா அது

# பேஷண்ட் to ஃப்ரெண்ட்

படைப்பாயிடுமா? படைப்பிலக்கியம்னா வேற... தமிழ் இலக்கியம் படிக்கிறதுண்டா?''

வந்த சில நிமிடங்களிலேயே இவர் முற்றிலும் மாறுபட்ட ஒரு நிறைகுட மனிதர் என்று புரிந்துகொள்ள முடிந்தது. இந்த நோயாளியிடம் என் வார்த்தை வாயிலேயே வழுக்கி விழுந்தது... கொஞ்சம் தயங்கி,

''இல்லே... பள்ளியில் படிச்சதுண்டு...'' என்றேன்.

''தயவு செய்து படிக்கடுங்க...'' என்றார். நானும் 'சரி' என்றேன். அது சரியாகப்பட்டது. வந்து போனவர் காய்ச்சலை முன்னிட்டு மேலும் இரண்டு முறை என்னைச் சந்தித்தார்.

நான் ஊசிபோட அவர் உலக இலக்கியம் பேச, நான் மாத்திரை பற்றி விளக்க, அவர் மரபு இலக்கியம் பற்றி அலச, என் ஹாஸ்பிடல் இலக்கிய ஆய்வரங்கமானது.




**எ**ன்னைத்தேடி வந்த நோயாளியின் காய்ச்சல் குணமானபின்பு, நோயாளியை நான் தேடிப் போய்ப் பேசத் தொடங்கினேன். எங்கள் நட்பு தொடர்ந்தது. என்னைக் காட்டிலும் இருபது வயது மூத்தவர். இலக்கிய உலகை எனக்குக் காட்டியவர் அவர்தான்.

# தமிழ் இலக்கியங்களை தயவுசெய்து படிச்சுடுங்க



● மா.அரங்கநாதன்

அதுவரை நகைச்சுவைத் துணுக்குகளையே சிறுகதைகளாக, அதுவும் ஒரு பக்கக் கதைகளாக எழுதிவந்த நான், பிறகு மாற்றி எழுதும் நிலைக்கு வந்தேன். ஒவ்வொரு முறையும் நான் எழுதிய கதை அவரிடம் சிறு அடித்தல் திருத்தல் பெற்று, புது வடிவம் மட்டுமல்ல... முழுமையே பெறும்.

"நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு நல்லா தெரியுது. அதையே ஏன் பூடகமா சொல்லக்கூடாது?" என மாற்றினார். நடந்த ஒரு கொடூரமான நிகழ்வை நான் எழுத்தில் விவரித்தபோது, "வீடியோ கேமரா வந்த பிறகு இது தேவையில்லே. உங்களுக்கு ஏற்பட்ட மனநிலை பாதிப்பைத் தான் வாசகனுக்கு உணர்த்தணும். ஆனா வெறும் காட்சியிலே இல்லே" என்று திருத்தினார்.

**எ**ங்கள் குடும்பத்தினர் அனைவரையும் நன்கு அறிந்த அவரைக் கலந்து ஆலோசிக்காமல், எந்த முக்கியமான முடிவும் நாங்கள் எடுப்பதில்லை என்னுமளவுக்கு நட்பு இறுகியது.

இப்போது புதுவையில் வசிக்கும் அவரோடு வாரம் மூன்று, நான்கு முறையாவது தொலைபேசியில் உரையாடாவிட்டால் எனக்கு இருப்பு கொள்ளாது. தலைவலியே வந்துவிடும்.

தாமே விளம்பரத்தைத் தேடி அலையும் மக்கள் மத்தியில், தமக்கு என ஏற்பாடு செய்திருந்த பாராட்டுக் கூட்டத்தில்கூட மேடையில் அமரத் தயங்கியவர் அவர்.

நோயாளியாக வந்து நண்பனாகி எனது அறியாமைகளை அகற்றும் எழுத்து டாக்டராகிவிட்ட அவர் யார் தெரியுமா?

1951லிருந்து தமிழ் இலக்கியத் தளத்தில் இயங்கி வருபவர். நான்கு சிறுகதைத் தொகுப்புகள், மூன்று நாவல்கள், மூன்று கட்டுரைத் தொகுப்புகள் வெளியிட்டவர். 'முன்றில்' என்ற சிறு பத்திரிகையை நடத்தியவர். மரபின் செழுமையும் நவீனத்துவத்தின் வீச்சும் பக்தி இலக்கியப் பிடிமானமும் தனித்த சிந்தனைப் போக்கும் கொண்ட.... மூத்த எழுத்தாளர் மா.அரங்கநாதன்தான்!

**- டாக்டர் பஞ்சாட்சரம் செல்வராஜன்**

**மிகத்தேவையான**
**ஒரு சமயத்தில்**
**தருவதாய்ச் சொன்னாய்**
**கிடைக்குமோ கிடைக்காதோவென்பதில்**
**நிச்சயங்களேதுமில்லையெனினும்**
**இப்போதைக்குப்**
**போதுமானதாக இருக்கின்றன**
**உதிர்ந்த வார்த்தைகள்!**

**— நளன்**



**சர்வார்த்ததாத்ரி** - ஸர்வ அர்த்தங்களையும் தரக்கூடியவள். அர்த்தம் என்று சொன்னாலே ஐச்வர்யம் என்றுதான் பொருள். ரொம்ப அழகான வார்த்தை இது. இரண்டு மொழிகளிலுமே இந்த வார்த்தைக்கான பொருள் ஒரே மாதிரிதான் வரும்: வடமொழியில் அர்த்தம் என்று சொன்னால், ஒரு சொல் அல்லது வாசகத்தின் பொருள்; ஐச்வர்யம் என்பதையும் அது குறிக்கும். தமிழிலோ பொருள் என்று சொன்னால், அது ஒரு வார்த்தை அல்லது சொல்லின் அர்த்தமாகவும் இருக்கலாம்; அல்லது, செல்வம் / ஐச்வர்யம் என்பதையும் குறிக்கலாம்! ஆக, இரண்டு மொழிகளிலும் ஒரே பண்புகளைச் சுட்டுகிறது இச்சொல்.

மகன் என்று பொருள் அல்ல. 'இந்த உலக வாழ்க்கையில் எதை நோக்கிப் போக வேண்டும்? என்ன காரியங்கள் உள்ளன? நோக்கங்கள் என்ன?' என்பதையெல்லாம் உணர்ந்து செய்பவரே புருஷர். அதை எப்படியெல்லாம் அடைய வேண்டும் என்று உணர்த்துவதே புருஷார்த்தங்கள்.

**வரிசையின் விசேஷம்**

ஜீவனுடைய இலக்காக அமைந்து, அதனை நெறிப்படுத்தி உயர்த்தும் புருஷார்த்தங்களை நமது மகனீயர்கள் ரொம்ப அழகாக வகைப்படுத்தினார்கள். முதலில் தர்மம். அதற்கப்புறம்தான் அர்த்தம்; அதன் பிறகு காமம்; அப்புறம் மோக்ஷம்.

# உயர்பொருள் நாயகி

அர்த்தம் என்பது ஐச்வர்யம் எனில், எந்த மாதிரியான செல்வத்தை அது குறிக்கிறது?

புருஷார்த்தம் என்று சொல்கிறோம். ஒவ்வொரு ஜீவனும் பிறப்பும் பூமியில் பிறந்து வாழ்க்கையை நடத்தும்போது, எந்த செல்வத்தை - ஐச்வர்யத்தைப் பெற வேண்டும் என்பதற்காக வாழ்கிறது...? நான்கு வித விஷயங்களை அடைய வேண்டும் என்பது மனித ஜீவனின் குறிக்கோளாக இருக்கிறது அல்லது சொல்லப்பட்டிருக்கிறது. 'புருஷம்' என்பது உழைப்பினால், வீரத்தினால் பெறக்கூடிய தன்மை. பிற்காலத்தில், இதனால்தான் அதிகம் உழைத்த வர்கத்துக்குப் புருஷ வர்கம் என்று பெயர் வந்தது. புருஷன் என்றால் ஏதோ ஆண்

சாதாரணமாக, 'முதலில் செல்வம் வந்துவிடட்டும்; அப்புறம் தர்மம் செய்வது பற்றி பார்த்துக் கொள்ளலாம் என்றுதான் சொல்லத் தோன்றும். ஆனால் வரிசையிலே அறம், பொருள், இன்பம், வீடு - என்று அறத்தை தான் முதலில் வைத்தார்கள்.

'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்றார் வள்ளுவர். ஆகவே, பணம் / பொருள் தேவைதான். ஆனால், அதை ஏன் முதலில் வைக்காமல், இரண்டாவதாக வைத்தார்கள்? 'முதலில் செல்வம் வந்துவிடட்டும்; சம்பாதிக்கும் வரை சம்பாதிப்போம். அதன் பிறகு மற்றவற்றைப் பார்த்துக் கொள்ளலாம்...; சம்பாதித்து, நாலு காசு கையில் தங்கினால்தானே தர்மம் செய்ய முடியும்!' என்று எண்ணுவோம்.

ஆனால், நம் மகனீயர்கள்




**ஸ்ரீ லலிதா**

**நான்காம் பாகம்**

**சுதா சேஷய்யன்**

முன்னோர்கள் - அப்படி நினைக்கவில்லை. தர்மம் பண்ண வேண்டும் என்கிற சிந்தனை இருந்தால், கையிலே காசு பணம் தானாக வந்து சேரும் என்று நினைத்தார்கள். அதனால்தான் தர்மத்தை முதலில் வைத்து, இரண்டாவதாக அர்த்தத்தை (பொருள் சம்பாதிப்பதை) வைத்தார்கள்.



**அர்த்தமும் அனர்த்தமும்!**

சங்கர பகவத்பாதர் பாடுகிறபோது, ''அர்த்தம் அனர்த்தம்'' வருபவரைப் பார்த்துப் பயப்படுகிறோம்.

கள்ளர்கள் அல்லது திருடர்களைப் பார்த்துப் பயப்பட வேண்டியிருக்கிறது என்பது மட்டுமல்ல; 'சொந்த புத்திரர்களைப் பார்த்துக் கூட பயப்பட வேண்டியிருக்கிறது' என்று ஆசார்யர் ஆதிசங்கரர் சொல்கிறார்:

*புத்ராதபி தநபாஜாம் பீதி:*
*ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி:*

- புத்திரர்களைப் பார்த்துத்தான் பயப்படவேண்டும் என்பதல்ல;

**சூரியனுக்கு சவித்ரு என்று பெயர்; உலகத்தை சிருஷ்டி செய்யக்கூடிய அம்பாளுக்கும் சாவித்ரி என்று பெயர்.**

என்பார் (பஜகோவிந்தம்). அர்த்தம் எப்போது அனர்த்தமாகப் போகும்...? அது எந்தக் கணத்திலும் அனர்த்தமாகிவிட முடியும். செல்வம் எப்போது வரும் என்று வேண்டுமானால் ஓரளவு தெரிந்து கொள்ளலாம். ஆனால், அது எப்போது போகும் என்பதை மட்டும் யாராலும் சொல்லவோ, தெரிந்துகொள்ளவோ முடியாது!

நாம் பார்த்துக் கொண்டேயிருக்கிறபோது, கண்ணுக்கு முன்பாகவே பணம் போய்விடும்! அர்த்தம் என்று பணத்துக்குப் பெயரே தவிர, அது கணத்தில் அனர்த்தமாகப் போய்விடும்!

ரொம்ப அழகாக ஒரு விஷயம் சொல்லியிருக்கிறார்கள். கையிலே பணம் இருக்கக்கூடியவர்கள் யாரைப் பார்த்துப் பயப்பட வேண்டுமாம்...?

இப்படி ஒரு கேள்வியை எழுப்பி விட்டு, பதிலையும் சொல்கிறது சாஸ்திரம்: 'எதிரே வருபவருக்கு நம்மிடம் பணம் இருப்பது தெரியுமோ?' என்று எதிரே

ஹரதி நிமேஷாத்கால: ஸர்வம் என்றும் கூறுகிறார் ஆசார்யர்!

கண் இமைப்பதற்கும் குறைவான நேரத்தில் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய்விடுவான் ஒருவன்! காலம் நம் ஐச்வர்யத்தை முற்றிலும் அழித்துவிட வல்லது.

அதனால்தான் தர்மத்தைக் கொண்டு போய் ஐச்வர்யம் அல்லது அர்த்தத்துக்கு முன்பாக வைத்தனர் மகனீயர்கள்.

**ஔவையும் சொல்கிறாள்!**

ஔவைப் பாட்டி ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறாள்- 'அறம் செய்ய விரும்பு' என்று! 'அறம் செய்' என்றுகூடச் சொல்லவில்லை; செய்ய விரும்பினாலே போதும் என்கிறார். குழந்தைகளுக்காக ஆத்திச்சூடி பாடிய ஔவைப் பாட்டி, 'விரும்பு' என்கிற மூன்றாவது வார்த்தையை ஏன் சேர்த்துக் கொண்டார்? முதலில் விருப்பம் இருந்ததென்றால், செய்வதற்கான வழி எப்படியாவது வந்து

சேர்ந்துவிடும்! மனம் இருந்தால், மார்கம் எப்படியாவது கிடைத்துவிடும்!

தர்மம் செய்யவேண்டும் என்கிற விருப்பம் ஏற்படுகிறபோதே, பொருளை தர்ம வழியில் சம்பாதிக்க வேண்டும் என்கிற எண்ணமும் வந்துவிடும். அந்த வழியில் சேர்கிற 'அர்த்தம்' (செல்வம்) அனர்த்தமாகப் (விரயமாக) போகாது!

முதலில் பொருள் (செல்வம்) வந்துவிட்டதானால், அதன் பிறகு தர்மம் செய்ய வேண்டும் என்கிற சிந்தனை வருமா என்பதைச் சொல்லுவதற்கில்லை. கொஞ்சம் காக கையில் சேர்ந்த பிறகு, 'கொஞ்சம் தான் இருக்கிறது; நாளைக்கு இன்னும் கொஞ்சம் சேரட்டும் அதன் பிறகு தர்மம் பண்ணிக் கொள்ளலாம்...' என்று தோன்றிப் போகும். நிறைய பணம் வந்தாலோ, அதை வைத்துக் காப்பாற்ற வேண்டும் என்கிற சிந்தனையும் கூடவே வர ஆரம்பித்துவிடும். அப்புறம் எங்கே தர்மம் நிகழ்த்துவது?!

அதற்காகத்தான், முதலில் மனத்தில் தர்ம சிந்தனை பரவவேண்டும் என்பதற்காகத்தான் நான்கு புருஷார்த்தங்களுள் முதலாவதாக தர்மத்தை வைத்திருக்கிறது. தர்மம் என்ற கோட்பாடு மனத்தில் முதலில் பதிந்துவிட்டால் பொருள் சம்பாதிப்பதும் நியாயமான முறையில் அமைந்து நிறைய சம்பாதித்து, அதைச் செலவிடுவதும் நல்ல காரியங்களுக்காகச் செலவிட்டு, இன்பம் ஏற்பட்டு, அது இறுதியில் மோக்ஷ நிலையில் கொண்டு போய் விடும்.




இந்தக் கிரமத்தில் - வரிசையில் - தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்கிற புருஷார்த்தங்கள் நான்கையும் தரக்கூடியவள் அம்பிகை. அவை மட்டுமல்ல, அவற்றை மீறியும் இருக்கக்கூடிய எல்லாவிதமான ஐச்வர்யங்களையும் தரக்கூடியவள் என்பதால் **ஸர்வார்த்ததாத்ரீ** என்கிற திருநாமம்.

**ஸாவித்ரீ** - ஸவித்ர என்றால், 'உற்பத்தி செய்யக் கூடிய' என்று பொருள். சிவப் பரம்பொருளின் தர்மபத்னியானவள் ஜகத்தை உற்பத்தி செய்கிறாள். இதனால் அவளுக்கு சிருஷ்டிகர்தா என்றேகூடப் பெயர் உண்டு. சூரியனுக்கும் ஸவித்ர என்று பெயர் உண்டு. ஏன்...? தன்னுடைய தேஜஸினால் இந்த உலகை சிருஷ்டி செய்கிறான் சூரியன். எப்படி...? இரண்டு விதங்களில் சிருஷ்டி செய்கிறான். முதலில் இருட்டைப் போக்கி, 'உலகம் இருக்கிறது' என்கிற நம்பிக்கையை ·ருவதே சூரியப் பிரகாசம்தான்.

இரண்டாவது, தாவரங்கள் உணவை சிருஷ்டி செய்வதும் அவற்றிடமிருந்து நமக்கான உணவை நாம் பெறுவதுமான உலக வாழ்க்கை சுழற்சி நடக்க வேண்டுமானால், சூரியனுடைய ஒளி அவசியம். அதனால்தான் சிருஷ்டியோடு தொடர்புடைய சூரியனுக்கு சவித்ரு என்று பெயர்; உலகத்தை சிருஷ்டி செய்யக்கூடிய அம்பாளுக்கும் சாவித்ரி என்று பெயர்.

**(வளரும்)**



# தீபு - கோபு





கோபு... இன்னைக்கு என்னோட பர்த்டே... தெரியும் இல்ல.. என்ன கிஃப்ட் தரப் போறே?




தீபுவே வாய்விட்டுக் கேட்டுட்டா... ஏதாச்சும் சூப்பரா ப்ரசண்ட் செஞ்சு அவளை அசத்தனும்!




என் கனவுல கல்லைப் போடவே பந்த் நடத்தறானுங்க... என்ன செய்யறது?




வாவ்...ச்சோ ச்வீட்... எங்க வாங்கினே இதை?




கருத்து:கார்த்திக்
டோன்ட் யு நோ 'செல்லமே' பெட் ஷாப்.... எ ஃபேமஸ் ஷாப்பி ஃபார் பெட்ஸ்!




செல்லம்மாள் நகர் - 14வது மெயின்

